## நூல்செய்தற்குக்காரணம்.

கலிநிலைத்துறை.

பொருவில்கச்சியம்புராணம்வண்டமிழினிற்புகலென்
றிருநிலம்புகழ்மணிமதிற்கச்சியேகம்பர்
திருவருட்குரியான்றவர்கூறியசிறப்பா
லுரிமையுற்றெழுமாசையானுரைத்திடலுற்றேன். ௧

## அவையடக்கம்.

மாயைகாரியவுருக்களுமெம்பிரான்வடிவ
மாயவேலவையருண்மயமாகுமற்றதுபோற்
பேயனேன்பிதற்றுரையுமேகம்பர்தம்பெருமை
தூயகாதையுள்ளுறுதலாற்றுகளறத்தோன்றும். ௧

இழித்தசொற்புணர்த்தெளியனேனியம்பியகவியுங்
கழித்தவைவகையிலக்கணவழுவுக்குக்காட்டாப்
பழித்திடாதெடுத்தாளுவர்பல்வகைச்சுவையுங்
கொழித்தநாவினராகியவழுத்தபுகுணத்தோர். ௨

எழுத்துப்போலியுமெழுத்தெனவாளுவரதுபோற்
புழுத்தநாயினேன்பிதற்றியசெய்யட்போலியையும்
பழுத்தகேள்வியோர்கைக்கொள்வரென்பதுபற்றி
விழுத்தநாணினேன்சிவகதைவிளம்புதற்கிசைந்தேன். ௩

நெறிவழாவுமைபூசனைபோனெறிபிறழ்ந்தோ
னெறிதருங்கலுங்கைக்கொளுங்கச்சியெம்பெருமாற்
கறிவின்மேலவர்காப்பியப்பனுவல்போலறிவின்
குறியிலேன்கவிப்புன்சொலுங்கொள்வதுவழக்கால். ௪

அவையடக்கமுற்றிற்று.

## நூற்சிறப்புப்பாயிரம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அருட்பணிக்குரியமகேச்சுரர்முதலாநால்வருந்தருகவென்றறைய
மருட்பகைதமிக்குங்காஞ்சிமான்மியத்தைவழங்குதென்மொழியினாலுரைத்தான்
கருப்பகையிரிக்குஞானமுமேனைக்கலைகளுநகரிசறப்பயின்ற
மருப்பொழிலுடுத்தவாவடுதுறையில்வாழ்சிவஞானமாதவனே. ௧

நூற்சிறப்புப்பாயிரமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௨௭.

## நாடுவாழ்த்துத்துறை.

### கலிநிலைத்துறை.

பணங்கொள்பாம்பணிகம்பனார்பணிவுரைபயந்த
வணங்கினேனென்றுமமர்ந்தினிதரசுவீற்றிருக்கு
முணங்கரும்புகழ்க்காஞ்சியையகந்தழீஇயும்பர்
வணங்கமேவரும்பாலிநாட்டணிநலம்வகுப்பாம்.

## மழைவாழ்த்துத்துறை.

கடல்கடைந்திடச்செல்லுறாஉம்வெள்ளைமால்கடுப்பப் திலம
படலைவெண்முகில்பரவைநீருழக்கிவாய்மடுத்து
விடமெழுந்தெனமீண்டவம்மாயனைவிழைய
வுடல்கறுத்துவிண்ணெறிப்படர்ந்தொய்யெனமீண்டு. ௨

அற்றைஞான்றுமால்கயிலையைச்சரணடைந்தாங்குப்
பொற்றநந்தியஞ்சாரல்சூழ்பொருப்பினைக்குறுகிக்
கற்றைவார்சடைச்சுந்தரன்கடவான்மதுரை
முற்றுநான்முகிலெனவரைமுழுவதும்பொதிந்து. ௩

முரிந்தவெண்டிரைக்கருங்கடன்முகட்டினைக்குழித்து
விரிந்தவெள்ளநீர்மடுப்புழிக்கரந்துடன்மேவிக்
கரிந்திடத்தனைச்செய்ததீவடவையின்களவைத்
தெரிந்துவில்லுமிழ்தடித்தெனத்திசைதொறுஞ்சிதறி. ௪

கான்றவக்கனன்மீட்டடையாவகைகருதி
வான்றனிற்குனிசிலையெனத்தடையினைவாங்கி
யேன்றநீயினியெதிர்த்தனையாயிடினின்னே
யூன்றனோடுயிர்குடிப்பலென்றுருமொலியெழுப்பி. ௫

அடுத்தடுத்தலைமோதுதெண்டிரைப்புனலளக்க
ருடுத்தபாரிலுன்கிளையெலாமுதலறவொருங்கே
படுத்துநின்வலிபாற்றுவன்யாமெனப்பகைமை
தொடுத்தவெஞ்சினங்கொண்டமுன்மேலமர்தொடங்கி. ௬

விச்சைமந்திரவலியினால்வீங்குநீர்மழையை
வச்சிரக்கணையாக்கிமெய்வளமெனக்கருளும்
பொச்சமின்மறைவேள்வியும்புனிதனேந்தழலு
மெச்சமாகமற்றெவையுமீண்டறுக்கெனவியம்பி. ௭

## மழைவளம்.

காட்டகங்களுங்கழைநரல்கதிர்மணிச்சிமயக்
கோட்டகங்களுங்குளிர்புனற்கழனிசூழ்குலவு
நாட்டகங்களும்பரன்புரம்படுத்தெரிநடஞ்செய்
மோட்டகங்களுமுழுவதுங்குளிர்கொளச்சொரிந்து. ௮

இற்றெழுந்தனவொழியமற்றெஞ்சியவெரிபோய்க்
கற்றவேதியர்வேள்வியஞ்சாலையுட்கரப்ப
வுற்றவாகண்டுதன்சினக்கனலையுமொருவி
வெற்றிமாமுரசெனமறைப்பேரொலிவிள்க்கி. ௯

தனதுகீர்த்தியுந்திறற்பிரதாபமுந்தரைமே
லனல்செய்கோபமுமுல்லையுமெனவெங்குமமைத்துப்
புனிதமாமவைதன்னையும்பொதிந்துகொண்டென்னப்
பனிவிசும்பினிற்சிவந்துவெண்ணிறம்படைத்தன்றே. க0

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உடுவணிகுடுமிக்கோடுபிள்வுபட்டிடையப்பெய்யுங்
கொடுமழைக்காற்றுதங்கட்குளிர்பெயன்மாறவெண்ணி
நெடுமலையடுத்துக்காட்டுநெட்டிதழ்க்காந்தட்கொள்ளி
விடுசுடர்க்கணலியந்தப்புனலொடும்வீந்ததன்றே. கக

போதமேலாகப்பண்டேபுல்லியமலநோய்தீர்ந்தும்
வாதனைதாக்குமாபோன்மழைப்பெயன்மாறித்தீர்ந்துங்
காதல்செய்துறையும்புள்ளுமாக்களுங்கவன்றுநெஞ்ச
நோதகமரங்களெல்லாநுண்டுளிதுவற்றுமாதோ. கஉ

கனைபெயலெழிலிக்கூட்டங்கலிவிசும்பகடுபோழ்ந்த
நனைமுடிநந்திக்குன்றநளிபடப்பொழியுந்தெண்ணீர்
புனைமறைவசிட்டமேலோன்செருத்தலான்பொழிந்ததீம்பால்
வனைபுகழ்வெள்ளமென்னத்திசைதொறும்வழிந்தமன்னோ. கங

பாலியாற்றுவளம்.

கண்ணகன்குடுமிக்குன்றிற்கல்லெனக்கறங்கியார்த்து
விண்ணிவரேணியென்னவியன்முடிதொடுத்துவீழுந்
தண்ணறுவருவியெல்லாந்தலைத்தலைவிரிந்துதோன்றும்
புண்ணியப்பாலியாற்றிற்சேர்ந்துடன்போயுமாதோ. கச

பாரிடங்குழித்துவீழும்பல்வயினருவியெல்லா
மோரிரும்பாலியாற்றினொருங்குசென்றணையுந்தோற்றஞ்
சீரியபுவனந்தோறுஞ்சிதறியவினைகளெல்லா
மோரிடத்தொருவன்றன்பாலுடங்குசென்றுறுதல்போலும். கரு

விலகிவீழருவித்தாரைவேறுவேறுகவோடிக்
குலநதிப்பாலிவைப்பினேகமாய்க்கூடுந்தோற்ற
மலகில்பல்வழியுமூதாரணிமையினொன்றுமாறும்
பலபலமதமுமீற்றினொருவழிப்படலும்போலும். கசா

மலைநகைத்தனையகாட்சிவயின்வயினருவித்தாரை
சிலையினின்றிழிந்துமண்மேற்றிரண்டுசென்றணையுந்தோற்ற
முலவையோடிகலிச்சேடனுயர்வரைக்குடுமியெல்லாம்
பலதலைவிரித்துப்பொத்திக்கிடந்தவப்பான்மைபோலும். கஎ

குரைபுனற்றெண்டைநாட்டைக்குறும்பெறிந்தடிப்படுத்துப்
புரைதபநடாத்துகென்னுப்புதுமுகிலரசனந்தி
வரைமிசையிருந்துவேந்தாமணிமுடிசூட்டியுய்ப்பத்
திரைபடுபாலிவல்லேசிலையினின்றிழிந்துபோந்து. கஅ

அரசுகள்சூழ்ந்துசெல்லவருங்கணிமலர்வாய்விள்ளச்
சரிகுழற்குறமின்னார்கள்பறைபலதாலைவெள்ளம்
விரவிடப்பரியகாலாண்மேதகுமாக்களத்தி
யிருபுடைதழுவிப்போதவிகல்கொடுவையமூர்ந்து. கசு

அணிவகுத்தெழுந்துகுன்றாரும்பெறற்குறிச்சிபுக்கு
மணிவகையாரம்பூண்டுமெதுக்குடவிருந்துமாந்தித்
தணிவறவெளிக்கொண்டேகித்தலைத்தலைவேட்டம்போகித்
துணிபடமாக்களெல்லாந்தொலைத்துடனீர்ந்துச்சென்று. ௨0

கலிவிருத்தம்.

மண்டமர்மேல்கொடுவெந்தனமின்னே
தண்டகநாட்டுறைதாபதர்நோயோர்
பெண்டிருநும்மரணேகுதிர்பெட்டென்
றெண்டிசையார்ப்பவிசைப்பறைசாற்றி. ௨௧

இறுற்றிகிரிப்படைதாங்கியிபக்கோ
டுறுத்திறல்வெஞ்சிலைகாந்தளரும்பு
நறுப்பயில்கோலெனவேந்திநல்வீர
மறுப்பகைமாய்த்துறவெட்சிமலைந்து. ௨௨

முல்லையின்வேந்துமுடித்தகரந்தை
யொல்லையலைத்துயரானிரைபற்றி
மெல்லிதழ்தின்றுசிவந்தெழுவேய்த்தோ
ணல்லவர்கற்பையழித்துநடந்து. ௨௩

வஞ்சிமலைந்தழல்பாலையைவாட்டி
யஞ்சியிடாதுதன்ஞானையிருத்தி
யெஞ்சலுறுமருதத்திறையோடும்
வெஞ்சமரேற்றுழிஞைநுத்துணர்வேய்ந்து. ௨௪

தடுத்தெதிர்நின்றதட்டங்கரையெல்லாம்
படுத்துமதன்பயில்பாசறைவீட்டி
மடுக்குளமேரியின்வாட்டமனைத்துங்
கெடுத்தனமென்றுதழீஇக்கிளர்வுற்று. ௨௫

வீறியடாவகைவெஞ்சிறைகோலித்
தூறிடுமள்ளர்தொலைந்தழிவெய்தச்
சீறியடர்ந்துதெழித்துமுள்வேலி
கீறிவளைந்துகிடங்கினைநீங்கி ௨௬

நொச்சியைமுற்றியநொச்சியினுள்ளார்
பச்சிளநொச்சிபறித்தணியாமே
நச்சியதும்பைநறுந்துணர்சூடி
யச்செழுமாமதின்முற்றுமகழ்ந்து. ௨௭

கொச்சகக்கலிப்பா.

இடித்துவெளிசெய்துநகரெங்கணுநுழைந்தாங்
கடுத்தமடவார்வயிறலைத்தனரிரங்கக
கொடுத்திடுவளங்கள்பலகொள்ளைகொடுமண்ணி
னெடுத்துவருவெள்வரகுகொள்ளுடனிறைத்து. ௨௮

வெற்றிபுனைமாலிகைமிலைச்சியிருபாலுஞ்
சுற்றிவருபுட்குலநிரைத்தொழுதிதன்னாற்
கொற்றமிகுமார்கலியைநோக்கியறைகூவி
யெற்றுகழிநெய்தல்வழியெய்துறுதலோடும். ௨௯

பௌவமதுணர்ந்துபவளந்தாளமாகி
வெளவுதிரையேந்தியெதிர்கொண்டடிவணங்கச்
செவ்விதினுவந்துபயமீந்துசினமாறிக்
கௌவியமெய்யன்பொடுகலந்துளதையன்றே. ௯0

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தன்னடிப்படுத்துயேலத்தண்டகநாடுமுற்று
முன்னுறக்கவர்ந்துகொண்டவளத்தினுமூவிரட்டி
பின்னுறவளித்துவானிற்புலவரும்பெட்குமாற்ற
லங்கிலேயுயிர்களோம்பியரசுசெய்துறையுமபாலி. ௯௧

காரணப்பொருளின்றன்மைகாரியத்துளதாமென்ன
வாரணப்பனுவல்கூறுமரும்பொருடெளியத்தேற்றும்
பேரிசைப்புவிமேல்யார்க்கும்பெட்டனபெட்டவாறே
சீரிதிற்கொடுக்குந்தேனுத்தரவருஞ்செழுநீர்ப்பாலி. ௯௨

வறுமையுற்றுழியுந்தொண்டைவளமலிநாட்டோர்தங்க
ளிறுமுடல்வருத்தியேனுமீவதற்கொல்காரற்றே
தெறுகதிர்கனற்றும்வேனிற்பருவத்துஞ்சீர்மைகுன்றா
துறுமணலகடுகீண்டுமொண்புனலுதவும்பாலி. ௯௩

சொற்றவித்தீர்த்தமேன்மைசுவைபடும்பாலோடொக்கு
மற்றையதீர்த்தமெல்லாம்வார்தருபுனலோடொக்கும்
பெற்றிமையுணர்ந்துதொல்லோர்பெயரிடப்பட்டசீர்த்தி
பற்றியதெனலாம்பாலிப்பெருமையார்பகருநீரார். ௯௪

நாட்டுவளம்.

கலிநிலைத்துறை.

விளம்புமித்தகைமணிகொழிவிரிதிரைத்தரங்க
வளம்புனற்றடம்பாலியான்வண்மைபெற்றோங்கி
யுளம்பயின்றுநாற்பொருள்களுமுளுற்றுநர்க்கிடமாய்த்
துளும்புமேன்மையிற்பொலிந்ததுதொண்டைநன்னாடு. ௯௫

செக்கர்வார்சடைச்சிவபிரான்றிருவருள்செய்யத்
தக்கவாய்மையினுயிர்க்கெலாந்தன்னிடத்திருந்து
மைக்கணெம்பெருமாட்டியெண்ணுன்கறம்வளர்க்கும்
தொக்கமாப்புகழ்படைத்ததுதொண்டைநன்னாடு. ௯௬

பவம்விளேத்திடாப்பெரும்பதியெனத்திசைபோய
சிவம்விளேத்திடுநகரங்களேழுளுஞ்சிறந்து
தவம்விளேத்திடுகாஞ்சியைத்தன்னிடத்திருத்தி
நவம்விளேத்திடும்பெருமைபூண்டதுதொண்டைநாடு. ௯௭

தரைவிளங்கியதண்டகநாட்டிவிற்றகைசால்
வரையுங்கானமும்புறம்பணைப்பழனமுமணிநீர்த்
திரையும்வேலையுமென்னுநானிலத்தினுட்சிறந்த
புரையிலேந்திணைவளஞ்சிறிதறிந்தவாபுகல்வாம். ௯அ

குறிஞ்சி.

முருகவேட்கிடுதூமமோம்புறமுளியகில்சந்
துருவவாரழற்பெய்துபுன்பயிர்விளேத்துவப்பார்
பெருவளந்துறந்தூர்தொறும்பலிபேணும்
பொருவில்வாழ்க்கையர்தஞ்செயல்போன்மெனப்பொருப்பர். ௯௯

ஏறுதன்னுடல்வருத்தியபகைமையெண்ணாது
தூறுபன்மணிமரமுதல்பொறையெலாந்தொலைத்த
வேறுநன்றியேகடைப்பிடித்திதைவியன்பொருப்பர்க்
கூறுநல்வளம்விளைத்திடுமாதவர்செயல்போல். ௪0

வேட்டைமேற்புகுவார்க்குநல்வினையுந்தமட்டார்
கூட்டம்வாய்க்குமச்சாரலிற்றினைக்குரற்கொய்துஞ்
சேட்டிளங்கிளிக்குலங்களத்தெரிவைமாரோப்பும்
பாட்டிசைத்திறமொளியிருந்தனுதினம்பயிலும். ௪௧

நங்குலத்தருவாழ்க்கையைக்கெடுத்துநம்மிருக்கை
தங்களுக்கெனக்கொண்டவில்வேனல்கடம்மை
யிங்கண்வாட்டுதுமென்பதோர்சூழ்ச்சியெண்ணியபோ
லங்கணெஞ்சியவேங்கைகள்போதுசெய்தலரும். ௪௨

என்னையூர்ந்தருள்சுடர்வடியிலையவேற்பெருமான்
றன்னைநன்மருங்கெனப்படைத்தவன்றனதூர்தி
யன்னதாமெனுங்கேண்மையானளிமுகிற்குலத்தைக்
கன்னிமாமயில்காண்டொறுங்களிசிறந்தகவும். ௪௩

நெருங்குழைபைந்தழைவருக்கைமேனெடுவெளியலைப்ப
வருங்கண்மாமயில்வீற்றிருந்துசைதருங்காட்சி
கருங்கணுயிரச்செம்மறன்மருகனைக்காண
மருங்குவந்துதன்னூர்தியையிறவுதன்மானும். ௪௪

சந்துமாரமுந்தாங்கிவம்பலர்ந்ததண்குவட்டான்
மைந்தர்கண்ணையுமனத்தையுங்கவர்ந்திடும்வனப்பின்
முந்துமோங்கலுங்கொடிச்சியர்குழுக்களுமுகிறோய்
கந்தமார்குழைமுகத்தலரிலவங்கங்காட்டும். ௪௫

கொங்கையேந்தியவாண்களுமவணகொம்புடைய
துங்கவேங்கையின்குலமெலாமவணபால்சுரந்து
பொங்குநீடுசேவினங்களுமவணவான்புனலை
யங்கண்வேட்டுணுமொற்றைத்தாளெகினமுமவண. ௪௬

ஆணெலாமொருகன்னியைமணப்பவானணையுங்
கோலைவேங்கைகள்யாட்டினேடுறவுகொண்டோங்கும்
பேணுசேவினஞ்சிங்கமேலேற்றிடும்பிழையா
தேணினுற்பொலியெகினங்களிடபத்தைவிழுங்கும். ௪௭

வில்லலர்ந்தபல்லுடுக்களும்விண்ணெறிப்படருஞ்
செல்லும்வெண்கதிர்க்கடவுளும்பானுவுந்திறல்சான்
மல்லல்வானவக்குழுவுமெய்ப்பாறவந்திருக்கு
மில்லமெங்கணும்வான்றொடுவிழைத்திடுங்குன்றம். ௪௮

போதுமூன்றினும்போதுசெய்காவிசூழ்பொருப்பு
மேதகுந்தமிழ்க்கெல்லையாம்வேங்கடவரையுங்
காதல்பூப்பவத்தாணிகொண்டாறுமுகக்கடவுள்
கோதுநீத்தரசாட்சிசெய்குறிஞ்சியக்குறிஞ்சி. ௪௯

அன்பெலாமொருபிழம்பெனத்திரண்டகண்ணப்ப
னெம்பிராற்கொருவிழியிடந்தப்புகாளத்திப்
பொன்பிறங்கியமுகலிசூழ்கயிலையம்பொருப்புந்
தன்புலத்திடையுடையதுதடவரைக்குறிஞ்சி. ரு0

நாவன்மன்னவர்க்கிரந்துசோறளித்திடுநம்மான்
றேவியோட்டமர்திருக்கச்சூர்திருவிடைச்சுரமும்
பாவகாரியரெய்தொணாக்கழுகுசூழ்பறம்பு
மேவரத்திகழ்குறிஞ்சியின்பெருமையார்விரிப்பார். ருக

பாலை.

குராவளித்திடுபாவையைக்கோங்குபொன்கொடுத்துப்
பராரைப்பாடலம்பூந்தழற்பாங்கரின்மணப்ப
மராமரத்துளர்வண்டுபண்பாடவன்முருங்கை
விராவிவெண்பொரியிறைத்திடும்வியப்பினதொருபால். ருஉ

எயிற்றிமாரெழினலத்தினுக்கிரியல்போயுடைந்தாங்
கயற்பொதும்பர்புக்கலர்குராப்பாவைகண்டவர்தந்
துயிற்றுசேயெனக்கவன்றுபோய்த்தூதுணம்புறாக்கள்
வெயிற்றலைக்கணின்றுயங்குவநிலைமைவிண்டவர்போல். ருங

தூதுணம்புறவினமெலாந்துணையுடன்கெழுமிப்
போதலூடியுமுணர்த்தியுந்தலைத்தலைப்புணர்ந்து
காதலந்நலார்மொழியையுங்கடந்துசேணிடைச்செ
லேதிலாடவர்தமைச்செலவழுங்குவித்திடுமால். ருச

வெங்கதிர்ப்பிரானண்பகற்போதினில்வேனின்
மங்கைகொங்கைதோய்ந்தளித்திடும்பாலையாமைந்த
னங்கணிலவரசர்பாலிரந்துவன்முரம்பு
தங்குசூழலிற்சிற்றரசாள்வதுமுளதால். ருரு

முல்லை.

நவிலுமிந்நிலப்புறம்பயில்புறவநன்மடந்தை
குவிவருந்தழல்வெம்மைகூர்கொடும்பசிதணியச்
செவிலியாய்முகிறீம்பயமூட்டிடவளர்ந்தாங்
கவிழுநீள்வரகாதியாமகப்பயந்தளிக்கும். ருசு

கொல்லையெங்கணுங்கொழுமலர்ததைபுனமுருக்கின்
முல்லைமென்கொடிபடர்ந்தலர்நிரைநிரைமுகிழ்ப்ப
வல்லைவென்றகந்தரப்பிரானரக்கெறிமார்பிற்
றொல்லைவெண்டலைமாலிகைதுயல்வரன்மானும். ருஎ

நீலம்பூத்தலர்பூவையைக்கோட்டுநீள்கரத்தாற்
கோலம்பூத்தபொற்கொன்றைகடழீஇக்கிடந்தசைவ
வாலம்பூத்தருண்மிடற்றினோனென்றுமோகினியாஞ்
சீலம்பூத்தமாலிளமுலைதிளைப்பதுதெளிக்கும். ருஅ

பெண்ணலங்கனியிடைக்குலப்பிடிநடைமடவார்
விண்ணலங்கனிமாதரையெழிலினால்வென்று
பண்ணலங்கனிமிடற்றவர்பணைத்தழைக்கரிந்து
மண்ணிலெங்கணுந்தூக்கிவைத்தெனக்குமிழ்மலரும். ருகூ

மௌவலங்குழலார்விழிக்குடைந்துவானகுதிக்கு
நவவிமீண்டகலாவகைமகளிரானனத்துக்
கொவவுறுதவராணையிற்றிரியுமொண்மதிகண்
டவ்வுழித்தனதிருக்கையிற்சிறைப்படுத்தலைக்கும். கூ0

கற்றைவார்குழலாய்ச்சியர்கயல்விழிமுகத்தின்
பெற்றியொப்புறப்பெருங்குருந்துச்சிமேற்றாவி
யொற்றைமானுடைக்கலைமதியதனிழலுறங்கு
மற்றைமானையும்பற்றுவான்கதிர்க்கையால்வருடும். கூக

நலம்பயின்றிளவேனிலைவிலுமாங்குயில்க
ளலம்புகார்வரும்போதுவாயடைப்பதுமுன்னாட்
புலம்புகொண்டவர்காரொடுந்தலைவர்தேர்புகுத
வலம்புனைந்துரைவளமொழிக்கிடைதலானன்றே. கூஉ

தொண்டைமார்கடக்களிற்றினைமுல்லையாற்றொடக்கி
யண்டர்தம்பிரான்வெளிப்படக்காட்சிதந்தருள்சீர்
கொண்டவான்பதிமுதல்பலதன்னிடைக்குலவக்
கண்டமுல்லையின்பெருமையார்கட்டுரைத்திடுவார். கூங

மருதம்.

பொலஞ்சிறைச்சுரும்புளர்தருகுறுஞ்சுனைப்புறவ
நிலந்தனைப்புடையுடுத்ததுநெட்டிளவாளை
யிலஞ்சிநின்றுமீப்பாய்ந்துவெண்மதிகிழித்தேகித்
தலங்கொள்வானியாற்றுலவுபூந்தடம்பணைமருதம். கூச

ஒருவனாகியசிவபிரானுலகுயிரளிப்பக்
கருணைகூர்ந்துதன்னைவந்தருபேதமுங்காட்டுந்
திருநிகர்ப்பவோபாலியேவயல்வளஞ்செழிப்பப்
பெருகுதண்புனல்பற்பலகால்களாய்ப்பிரியும். கூரு

பராரைமூலமேற்பணைகிளைவளாரெனைப்பலவும்
விராவியொன்றிலொன்றனந்தமாய்க்கவடுவிட்டென்னத்
தராதலம்புகும்பாலியிற்பிரிந்துதண்கரைக்க
ணராவுகால்களுமவைதருகால்களுமனந்தம். கூசா

நான்முகப்பிரான்வேள்வியைத்தபவருநதியை
மான்மறுத்திடைக்குலையெனக்கிடந்தமைமான
மீன்முகப்பெருங்காற்புனறட்பவீழ்ந்துழக்கும்
பான்முலைக்கருமேதியாற்பருமடையுடையும். கூஎ

பழங்கண்வேனிலைப்புயல்கொடுபோற்றுதன்னிறைக்குத்
தழங்குமோதையின்மருதம்வாழ்த்தெடுப்பதுதகைய
வழங்குதண்ணுமையோதையுமள்ளரார்ப்பொலியு
முழங்குதீம்புனற்சும்மையுமுடுகிவிண்புகுமால். கூஅ

பொறிகளைந்தையும்புறஞ்செலாதடக்கியோர்நெறிக்கே
குறிகொளும்படிசெலுத்துபேராளர்தங்கோள்போற்
பிறிவுறும்பலமடைகளிற்பிழைத்திடாதொதுக்கிச்
செறிதரும்புனன்முழுவதுமகன்பணைசெறிப்பார். கூகூ

பழியினீங்கினன்கீட்டியபசும்பொருள்சிறிதுங்
கழிபடாதுநல்வழிப்பயன்படுவதுகடுப்பக்
கொழிதிரைச்சுவைப்பாலியின்குளிர்புனன்முழுதும்
வழிவுறாதுகால்வழிச்சென்றுவளவயனிறைக்கும். எ0

கண்ணகன்புவிமுழுதுமாங்கடுங்கொலையவுண
னண்ணன்மார்பகம்பிளப்பவர்போலவிர்மணியின்
வண்ணவன்கடாநிரைநிரையாத்துவன்பணையாற்
பண்ணைதோறுநின்றுழுநர்கம்பலைகளோயெங்கும். எக

மருவுசாறுறும்வெருவிமுன்குதித்தெழுவாளை
யிருமருப்பிடையுதைந்துழுமெருமையைத்தடுக்கும்
பருவராற்குலமொய்யெனப்பாய்ந்தெழுந்தலைக்கு
முருவவாற்புறத்துதைந்துவல்விரைந்தெழவுந்தும். எஉ

பூண்டவன்கொடுந்தானவனுக்கைபோழ்ந்திடலுங்
காண்டகும்புவிதன்னிறங்காட்டியதென்னக்
கீண்டசாறுறுஞ்சேழ்கிளர்தமனியங்கிடந்து
மாண்டபேரொளிவயங்கிநீள்கனையிருண்மேயும். எங

வேறுசெய்துபின்பொருத்துறும்வினைவலவமைச்சிற்
கூறுசெய்ததண்சேறெலாந்துருப்பியொன்றாக்கிச்
சாறுசெய்துவாசவற்கெழுதுறுபிடர்தவிர்த்து
நாறுசெய்கெனவெண்முளைவித்துவர்நாளால். எச

அருள்விளங்கலுமுடல்பொருளாதியபந்தந்
தருமவன்புடையெய்துறக்கொடுத்திடுந்தகைபோற்
பெருகயாத்தநீர்க்கலங்கல்போய்த்தெளிந்தபின்முழுது
மருவுகால்வழிவடிந்துறக்கவிழ்ப்பர்களுழவர். எரு

கலிவிருத்தம்.

இளமகப்பசிதனக்கேந்துகொங்கைப்பா
லளவறிந்தூட்டுதாய்மாணவாறறி
களமர்கண்முளைப்புறல்செவிகண்டுநீர்
வளவயல்பாய்த்தித்தம்மகவினோம்புவார். எசு

ஓரிடத்துயிர்த்ததன்பறழையோம்புவான்
பாரிடைப்பல்வயினுய்க்கும்பூழைபோற்
காருடற்களமர்கைந்நாறுவாரிப்போய்ச்
சீருடைப்பணைதொறுநடுதல்செய்வரால். எஎ

மரகதந்தளிர்த்தெனவளர்பைங்கூழ்செறி
தரநிறைகழனியுட்சங்கமூர்வன
பரவைநீர்மேய்ந்தெழும்படலைக்கொண்டலூட
சரமதிநுழைந்துசெல்காட்சிசாலுமால். எஅ

களமர்கள்களைகளைபருவங்காட்டலு
மிளமயில்வயல்வளங்காணவெய்தியாங்
குளமகிழ்கூர்தரவுழத்திமாரெலாம்
வளமலிபணைதொறும்வந்துமுற்றுவார். எகூ

அம்புயமுருப்பலமாம்பலாதியாம்
பைம்புதற்களையறப்பறித்ததம்முருக்
கொம்புனற்றோன்றலுங்கொய்துபுன்களை
பின்பினுமுளைப்பதென்பெயர்த்தென்பார்சிலர். ௮0

பங்கயமாம்பலுற்பலத்திற்றேனுண்டு
தங்கியவண்டினந்தமதுவாண்முகஞ்
செங்கனிவாய்விழிசேர்ந்துமூசுற
வங்கவைகட்டெறிந்தகற்றுவார்சிலர். ௮௧

பாயிதழ்த்தாமரைப்பறித்தங்கொப்புமை
யாயுநரெனமுகஞ்சேர்த்தியைதுதேன்
வாய்மடுத்திணையிலதென்றுமாற்றல்போன்
மீயுயர்கரைப்புறம்வீசுவார்சிலர். ௮௨

இணைவிழிக்கிணையிலையென்பதன்மையி
னணுகிநீகாணெனவழைத்துக்காட்டல்போற்
பிணையுநாசியினெதிர்பிடித்துமோந்துதேன்
றணிவிழுப்பலமுடிசார்த்துவார்சிலர். ௮௩

சைவலங்களைகுவான்குனியத்தாழ்குழ
லெய்தியெம்மினத்தினையொறேன்மினென்பபோற்
கைமிசைவிழுந்துசிக்குண்ணக்காணிமிர்த்
தையுபூங்குழன்முடித்தலைகின்றார்சிலர். ௮௪

நறுமலர்ப்பங்கயங்களையுநாரியர்
கறுவொடுமுள்ளரைக்காம்புபற்றலுஞ்
செறுகரங்கிழியப்புண்செய்யுமேதமக்
கிறுதிசெய்வார்க்கெவரிடரிழைத்திடார். ௮௫

அலமருவிழியினமாமெனுமுக
மலர்மிசைப்பாய்தருகயலுமாண்டதுன்
குலமெனப்புறவடிகூடுங்கூர்மமு
மிலவிதழ்க்கடைசியரெளிதிற்கைக்கொள்வார். ௮௬

பறிதரக்களைந்தெறிபாவைமாரைய
மறிபுனற்குவளைகால்வளைத்துப்பாம்பெனப்
பொறிவெருவுறச்செயும்புடைப்பின்மொய்ம்பிலாச்
சிறியருந்தம்மினுந்தீங்கிழைப்பரே. ௮௭

களிபடுசுரும்புளர்கமலக்கஞ்சமு
நளிபடுகுவளையுநனைகொளாம்பலுந்
தளிரியற்கடைசியர்முழுதுஞ்சாடுவா
ரளிமருவலர்க்கெவரன்புசெய்குவார். ௮௮

புரைதபுபசும்பயிர்ப்பொலிவுங்கூங்கெலா
நிரைநிரைகிடந்தபன்னிறத்தபூக்களும்
வரைதவழ்முகில்களும்வானவிற்களுந்
தரையிடைப்பயன்பெறச்சார்ந்ததொக்குமால். ௮௯

இருண்முகிலுறம்பயிரிடையெலாந்தடித்
துருகெழவயங்கியாங்குலவுமங்கலார்
திருமலர்ப்பதமெலலப்பெயர்த்துத்தேங்குழற்
கருஞ்சிமிருர்த்தெழக்கரையிலேறுவார். சு0

தெறுங்களைகட்டநீர்ச்செறுவிற்பண்டுபோ
னறுங்களம்போருக்ச்சேக்கைநாடிவந்
துறுங்களியோதிமமுயங்கிவாடுவ
வறுங்களநாடியுண்மறுகுமாந்தர்போல். சுக

கொள்ளைபோய்நனிவற்றங்கூர்ந்தக்காலையும்
வள்ளியோர்விருந்தினர்வாடக்காண்பரோ
கள்ளவிழ்மலர்வளமிழந்துங்கார்வயல்
வெள்ளனமகிழமீன்விருந்துநல்குமால். சுஉ

மண்ணகமகளிர்கைவண்மைகண்டயாம்
விண்ணகமகளிர்கைமேன்மைகாண்டுமென்
றெண்ணிமேற்சேறலுற்றென்னவான்பயிர்
கண்ணிறைகவின்செழித்தோங்குங்காட்சித்தே. சுங

கொச்சகக்கலிப்பா.

ஈன்றெடுத்தோர்குணமகவுக்கியையுமுறைப்படிவித்திற்
றோன்றுமுளைமுன்விளர்த்துப்பின்பசந்துதொடர்பிஞ
லான்றசெழுங்கதிர்களுமுன்றாவெள்ளையாயெழுந்து
மான்றமரகதமேனிவாய்த்துமடல்கிழித்தெழுமால். சுச

அரமகளிர்கைவளமறிபாக்குமேற்போந்து
திரையெறிநீர்க்கடல்வரைப்பிற்றெரிவையர்கைக்கிணையொவவா
மரபுணர்ந்துமீண்டென்னவானேக்கிக்கதிர்த்தெழுந்த
பரவுபுனற்றடஞ்சாலிபார்நோக்கியிறைஞ்சுமால். சுரு

பேதைமையிலாடவர்முன்வளைவின்றிப்பெதும்பைமையின்
மேதகச்சற்றெனவணங்கிமங்கைமையின்மிகநாணு
மாதரைப்போற்பைங்கூழின்மன்னனெதிர்கதிர்த்தெழுந்த
வேதமிலாக்கதிர்முதிர்ந்துவரவரக்கீழிறைஞ்சுமால். சுசா

உருத்திட்பமுருக்காலைத்தலைநிமிர்இயுற்றதற்பின்
றருக்கற்றுநனிவணங்கிப்பழுத்தகதிர்த்தடஞ்சாலி
பெருக்கத்துவேண்டுமாற்பெரும்பணிவுமிகச்சிறிய
சுருக்கத்துவேண்டுமுயர்வெனுமொழியின்சுவைதேற்றும். சுஎ

தூமதிவாக்கியகிரணந்துளித்தென்னக்கதிர்ச்சாலி
காமர்மணித்தரளங்கள்கானறுசெந்நெற்றிடராக்கிப்
பூமலர்க்கால்யாத்தபுனன்முழுதுமபுறங்கவிழ்த்து
மாமைநீர்புலர்த்தவருமள்ளருளமகிழ்விக்கும். சுஅ

வணங்குகுலைக்கதிர்ச்சாலிசிலையாகவளர்பதடி
யுணங்குகதிர்கணையாகவொளிர்முளரிக்கரம்பற்றி
யிணங்குபசுங்குரல்கவரவரும்புட்களிரிந்தோட
வணங்குபுரிந்தெதிர்கண்டோரதிசயிப்பச்செயும்பணைகள். சுகூ

பாலொளிநீத்தெழும்விடத்தான்முகில்வண்ணம்படைத்திருந்த
மாலவனார்கலிக்கச்சிவந்தெய்தித்தவமுஞற்றி
மேலையுருச்சிவந்தென்னவெள்ளொளிபோய்ப்பசந்தெழுந்த
சாலியெலாஞ்செங்கனகநிறம்வாய்ந்துதழைக்குமால். கOO

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நாவலோர்புனைந்துரைக்குநலமுழுதுமமைந்துவடநாகஞ்சூழ்பொன்
னாவலோவெனவியப்பவளர்செந்நெலரிபருவநாடித்தெண்ணீர்
நாவலோனுளங்களிப்பப்படியெடுக்குங்குண்டைநகருழவர்போல்வார்
நாவலோவெனவிளிப்பத்தொழுவரெலாநயந்தெய்திவினையின்மூள்வார்.

கலிவிருத்தம்.

ஒருவருக்கொருசெல்லலுற்றாலவர்
தருகுளார்க்குமடுப்பதுதிண்ணமே
கருவிமள்ளர்கதிர்க்குலைநன்றெடும்
பருமென்றூங்களும்பற்றியரிகுவார். கOஉ

அரிவர்சேர்ப்பரடுக்குவர்சிக்கென
வரிவர்செல்லிவியில்வைப்பர்களஞ்செலப்
புரிவர்பொன்னங்கிரியெனப்போர்செய்வர்
பிரிவர்மீள்வரிப்பெற்றியரெங்கணும். கOங

சிறைசெய்திம்புனனாட்டிறைசெற்றுமுன்
சிறையரிந்தவரைகளைச்சிற்றத்தாற்
சிறைசெயக்கருதித்தன்னிலத்தொரு
சிறைவைத்தாலெனப்போர்கள்சிறக்குமால். கOச

வெற்பெலாமண்ணின்விழ்த்துவலாரிதன்
னொப்பிலார்திறையேவியொறுத்தல்போற்
பற்பல்போர்கள்சரித்துப்பகட்டின
முற்பிணைத்துநடத்துவர்மொய்ம்பினோர். கOரு

நெற்பலாலத்தினீங்கியதோவெனப்
பற்பல்கான்முகங்கோட்டினபார்ப்பபோற்
பொற்பவாயினிற்பூங்கதிர்கவ்வுபு
சொற்பகட்டினஞ்சுற்றியுழக்குமால். கOசு

உடலினைவிபிரிந்தெனவூழ்வினைத்
தொடர்பினீங்குவதொப்பத்தொகுத்தநெற்
படலைவையினினீங்கப்பகட்டின
மடையவுந்தொடர்நீங்கியகலுமால். கOஎ

வையகற்றிவளியெதிர்தூற்றலும்
பொய்யகன்றவரைம்பொறிபோதல்போற்
கையகன்றுகழிவைப்பொடியொடு
மொய்யெனப்பதரப்புறத்தோடுமால். கOஅ

அறத்துநூல்வழியாற்றுவவாற்றியத்
திறத்தினெஞ்சியசெந்நெற்குவையெலாங்
குறித்தெடுத்துநெற்கூடுய்த்தறச்செயன்
மறப்பிலாதவளக்குடியெங்கணும். கOகூ

குறையவித்தினகொண்டுகுடியெலா
நிறையச்சாலிநிரப்புவபூம்பணை
யிறையளித்தவிருநாழிநெற்கொண்டே
யறமெலாநிறைவிக்குமமலைபோல். ௧௧௦

கொடுப்பகொண்டுபெருக்கிக்கொடுத்தலா
லடுத்தவாணிகர்போலுமகன்பணை
யுடுத்தசோலைகளும்பர்கடவுணீர்
மடுப்பதென்னவளர்ந்தெழுந்தோங்குமால். ௧௧௧

கலிநிலைத்துறை.

கொண்டலுகுக்குமாலிநிகர்ப்பக்குளிர்பாளை
விண்டுமுகைக்கும்பைங்கமுகங்கும்விளையாட்டு
வண்டலர்கொங்கைக்கிடையிளநீர்மற்றவர்காணு
தண்டமிசைக்கொண்டெய்தியளிக்கும்வளர்தெங்கு. ௧௧௨

செற்றெயில்வென்றார்தேர்மிசைமேற்போக்கொமென்பூத்
துற்றபொதும்பர்த்துறையினினத்தாற்செருவேற்றுப்
பற்றியவாவிநீங்குபுடைபைந்தேனடைகீறி
யுற்றெழுவாளைபொருதுயிர்விண்டார்கதிகாட்டும். ௧௧௩

போதுகண்மேயநெடுங்கயமேவுபுனிற்றுக்கார்
மேதியையாயிடைவாளைவெகுண்டுவிசும்பேறி
பாதிவெரிந்புறமுட்குழியக்குதிபாய்ந்தாடி
மீதுயர்திண்கரையேறவுகைக்கும்வியப்பிற்றால். ௧௧௪

சுவையொளியூறொலிநாற்றமெனைந்தின்றொடர்பற்றிக்
கவர்படுநெஞ்சிற்றிரைதிரைதோறுங்கடைநீர்நாய்
துவளவெழும்பாமுறைமுறைகீழ்நீர்ச்சுழல்காட்சி
யெவருமிறும்பூதுறவுளவேரித்தடமெங்கும். ௧௧௫

கரைத்துறுதண்பூங்காஞ்சிகள்சாகைக்கரமோச்சி
விரைத்தகரும்பைத்தைவருதோற்றம்விரிதார்வண்
டிரைத்தெழுதிண்டோட்கேள்வரொடுமிளையார்மே
னிரைத்தயர்செய்வான்வேள்சிலைபற்றுநிகழ்விற்றால். ௧௧௬

மேத்குசெவ்வணிதாங்கினர்செல்லுமினன்றொருந்
நீதறவெள்ளணிபூண்டுசெல்சேடியராமேனோரும்
போதலுமீடலுமாய்ப்பொலிவீதிகளெங்கெங்கும்
காதல்செய்சேரிமடந்தையருள்ளங்கவல்விக்கும். ௧௧௭

தசும்புறழ்கொங்கையொடெம்பெருமான்மகிழ்தண்பாசூர்
விசும்பையுரிஞ்சுமதிற்றிருவல்லம்விரைச்செந்தே
னசும்புதடம்பொழிலேனையவைப்புமனந்தஞ்சூழ்
பசும்பணைமாமருதத்தெழில்யார்பகர்கிற்பாரே. ௧௧௮

## நெய்தல்.

கொச்சகக்கலிப்பா

அம்மருதவைப்பிணையடுத்தகழிநெய்தன்
மம்மர்விடவாலமானுக்குதவுமாற்றா
னம்மினமெனப்பொய்ம்மொழிநாடியுரைகைதை
சும்மையவளக்கரொடுசூழ்ந்துறவுகொள்ளும். ௧௧௯

கண்டன்மடலேறவலர்தூற்றுகமழ்புன்னை
யுண்டுநறைகாலுமளியொத்துடனிசைக்கும்
வண்டுளருநம்புவிரிநெய்தன்மணமிசையுங்
குண்டுகழிமேய்பறவைநோக்கிமகிழ்கூரும். ௧௨௦

கண்டுமொழியாரவயவத்தெழில்கவர்ந்து
தெண்டிரையளக்கரினொளித்ததுதெளிந்து
கொண்டதுறையோர்கடல்குளிப்பர்துகிர்சங்கம்
வண்டரளம்வாரிமடவாரெதிர்குவிப்பார். ௧௨௧

எம்முடையுறுப்பெழிலைவவ்வினிர்களென்றுக்
கொம்மைமுலைவம்பணிபரத்தியர்வெகுண்டு
விம்முவளைசேல்பவளம்வெண்டரளமற்று
மம்மபிறர்கொள்ளவிலையாற்றிமகிழ்கூர்வார். ௧௨௨

கண்ணெழில்கவர்ந்தகடன்மீன்களையுணக்கு
முண்ணமிழ்தமன்னமடவார்பறவையோப்பும்
பண்ணிசைமடுப்பவிழைபல்வமுமருக்கன்
விண்ணெழுப்புகற்பொழுதின்மெல்லெனவொலிக்கும். ௧௨௩

துணைந்தவர்களாருயிர்வருத்துவிறல்சாற்றி
மணந்தழுவுதும்பைமலர்சூடியடன்மார
னணங்கமர்செய்காலமெனவோர்ந்துமுரசாழி
யிணங்குறவிராப்பொழுதின்மிக்கொலியெழுப்பும். ௧௨௪

வீழ்ந்தவர்துணைத்தலின்விழிப்புனலுகுத்துத்
தாழ்ந்தழுதிரங்குமடமாதர்தமைநோக்கி
யாழ்ந்தகழிமாதுமுடனின்றழுவதென்னச்
சூழ்ந்துபுளரற்றமலர்தேத்துளிதுளிக்கும். ௧௨௫

நலம்பயில்பொருட்குமலிவங்கமிசைநண்ணும்
புலம்பர்வருகின்றவழிநோக்கினர்புலம்பி
யிலம்படுமடந்தையர்களின்னுயிர்தளிர்ப்ப
வலம்புகுளிர்பூந்திவலைவீசுமலைவாரி. ௧௨௬

புன்புறபதத்தரும்வியந்துபுகழ்செய்ய
வென்னையொருபெண்ணெனவியற்றுநகரொற்றி
நம்பதிமுதற்பலவுடுத்துநளிநெய்த
றன்பெருமையாவரளவிட்டறிதரத்தோர். ௧௨௭

திணைமயக்கம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருத்தொண்டைநன்னாட்டுநானிலத்தைந்திணைவளமுந்தெரிந்துகாட்ட
மருத்தொண்டைவாய்ச்சியர்சூழ்குன்றைநகர்க்குலக்கவியேயவல்லானல்லாற்
கருத்தொண்டரெம்போல்வாரெவ்வாறுதெரிந்துரைப்பார்கலந்தார்க்கின்ப
மருத்தொண்டரணியிலவையொன்றோடொன்றியைந்தனவுமாங்காங்குண்டால்.

வரைப்பிண்டிமலர்தூவிவனப்பலாசெதிர்சொரிந்தமலருண்மூழ்கி
நிரைக்கும்பூங்கணைதூவிமதனெம்மான்விழிநெருப்புணிற்றல்காட்டும்
வரைத்துன்றுகறிக்கொடிபோய்க்கமுக்கைமிசைமரகதத்தோரணம்போற்றூவி
நிரைக்கிள்ளைவாரணமுமெதிர்நடப்பப்பொருநர்நெடுங்கயிறுகாட்டும்.

சுற்றெல்லாமலர்முல்லைதன்றந்துபெருந்தூறுசெயவதன்கீழெண்கு
பற்றிநுழைந்துறங்கநடுவளர்கொன்றைமிசைக்கறிதாய்ப்படருந்தோற்ற
முற்றரக்கன்வெள்ளிமலையெடுத்தநாள்வெரீஇத்தழுவுமுமையாளோடுங்
கற்றைவார்சடைப்பெருமானின்றநிலைகாட்டுவதுமுண்டாலங்கண்.

தாம்பயிலும்வரைக்கிளைத்தசெயலைமலர்கவர்மாரன்றன்மேற்சீறி [கும்
யாம்பலினங்கழனியிற்போயவன்சேமச்சிலைக்கரும்பையழித்துண்டார்க்
பூம்படுகர்ப்பகட்டினங்கள்வெகுண்டெழுந்துமலைச்சாரற்புனிற்றுவாழை
தேம்பயில்செந்தினையனைத்துமழித்துழக்கிமேய்ந்துவக்குஞ்செவ்வித்தோர்பால்.

வரைக்குறக்கன்னியர்புனத்துக்குருகோட்டுங்கவண்மணிக்கன்மருதத்தெண்ணீர்த்
திரைக்கயத்துத்திடர்செய்யவங்கிலந்துச்சிறுமகார்சினமீக்கொண்டு
விரைத்தகுழற்பேதையர்கள்வண்டலாட்டயர்துறையின்மேவிப்பந்து
நிரைக்கழங்குமவரலறப்பறித்தெறிந்துநீர்ச்சுனையைத்தூர்ப்பாரங்கண்.

தாமுமொருபயப்படார்பயப்படுவார்தம்மையுந்தம்போற்செய்வார்போய
காமரளிநுகராமற்கழிப்பூமேலடுக்கலுறுங்கணிதேனூற்று
மாமிதனையறிந்துவெகுண்டெழுந்தென்னவணிவேங்கைக்குடிமிதன்னை
நாமநீள்கூடல்பவளக்கரநீட்டிப்பற்றியிடுவலமுமோர்பால்.

அலைக்காகமலைச்சாரற்பலாச்சுளையைக்கவ்வியெழுந்தரக்கர்கோமான்
சிலைத்தாசரதிமனையைக்கொண்டகன்றெனவங்கஞ்சேருமந்நா
ணிலைப்பாமதிலிலங்கைநிசைத்தாவுமனுமனைப்போனிளவாமந்தி
மலைப்பாணிற்றலைத்தோணிபாய்ந்துழக்கிமீண்டெய்துமவ்வாழ்வுமங்கண்.

இடைச்சியர்பானடைகற்பச்செல்வதெனவயன்மேவுமெகினமெல்லாம்
படைத்தவளம்பாடியிற்போயான்பாலைவாய்மடுத்துப்பயுணீங்கு
மடைத்தலைசூழ்வயன்மகளிர்மொழிபயிலப்போவதெனவணைத்துள்வாழும் [ல்.
பெடைக்குயில்போய்ப்பிணைக்கமுகின்கனிதொண்டைக்கனியென்னப்பேணுமோர்பா

கொடும்பரவர்ழியுழக்கக்குதித்தெழுமீனுய்ச்சியர்பாற்குடத்துள்வீழ்ந்தங்
கடும்பயத்தோடலமருமற்றவர்கடையுந்தயிரோதைக்கலமந்தோடி
யொடுங்குமுயல்கைதையினுளடங்கியங்கட்கடலொலிகேட்டுள்ளமாழ்குங்
கடுங்கருமத்தொடர்ந்தோயாங்குறினும்விடாதெனக்காட்டுமோர்பால்.

இடுகுறிநீட்கடைசியர்கள்களைந்தெறிந்தநறுங்கமலமிரைக்குமுந்நீர்ப்
படுதிரைமேல்வயங்குதலுங்கடன்முளரிபூத்ததெனவன்பார்மீரென்பா
ருடைதிரைநீர்க்கடல்கிளைத்தநுகிர்க்கொடிபோய்ப்பழனமிசையொளிரக்கண்டோர்
கடிவயலுந்துகிரீன்றதென்னென்பாரிப்பரிசுகவினுமோர்பால்.

வரைப்புறத்துப்பசுங்கிளியுங்கான்குயிலுமுடனன்பான்மடுத்துப்புட்க
ளிரைத்தெழுபூம்பணைமருதச்சேக்கைமிசையெதிரெதிர்நின்றிசைகள்பாடு
நிரைக்குடுமிவரைப்பகடும்வயற்பகடுங்கரும்பொடித்துமரித்துமார்ந்தித்
திரைத்தடநீர்க்கான்யாற்றுத்திளைத்தாடியுடனுறங்குஞ்செவ்வித்தோர்பால்.

புறவகத்தகுமிழ்ம்போதுங்கழிக்கானற்கைதைதரும்பொலங்கேழ்ப்பூவுந்
தறைபொறுத்தவரைதோன்றித்தண்மலர்மேலிருபுடையுந்தாங்கிநின்றே
யிறைவனுக்காமலர்மோந்தாண்மூக்கரிந்துசுரிகையுடனேந்தியந்நா
முறைநிறுத்தசெருத்துணையார்நின்றநிலைகாட்டிவளமுகிழ்க்குமோர்பால்.

விண்முட்டுங்குடுமிவரைத்திகிரிபடும்வெண்முத்தும்வேலைச்சூழும்
மண்முட்டநறும்புன்னையுகுமரும்புந்தலைமயங்கியவற்றுட்சேர்ந்து
தண்முட்டையிதுவென்னப்பகுத்தறியவல்லாதுதளர்வுகொண்டு
கண்முட்டவளம்படைத்தவயலன்னந்துயர்கூருங்காட்சித்தோர்பால்.

குறுஞ்சுனையிற்களிவண்டுகுழன்றுடுகான்குயில்கள்குரைநீர்ப்புன்னை
தொறும்பொதுளுங்கருங்கொடிதன்குடம்பையிற்போய்க்கருவுயிர்த்துச்சலவிமீண்டு
நறும்பிரசமலர்க்காஞ்சிச்சினையேறியொளியிருந்துநாடிக்கால
முறுந்துணையுமினிதுறையுமுல்வாதுவளங்காட்டியோங்குமோர்பால்.

கறிக்கொடியுந்துகிர்க்கொடியுமெல்வயலைப்பசுங்கொடியுங்கமழ்தேன்மௌவல்
வெறிக்கொடியுநாற்றிசையுந்தாய்ப்படரநிவளர்ந்தவிரைக்குராமேற்
கிறிக்கொடியபெருங்காற்றுற்பல்காலுமசைபாவைக்கிளர்ச்சிவாள்கண்
மறிக்கொடியுங்கூத்தியர்செய்கயிறுவிசிகழைக்கூத்தின்வயங்குமோர்பால்.

இனையநானிலமடுத்துவளாகமெலாமம்பெருங்குடிகளியல்பினோங்கித்
தினையளவுமுறைபிறழாத்தொண்டைநாட்டணிமுழுதுந்தெரித்துக்கூறக்
கனைதிரைநீர்க்கடலாடைநிலவரைப்பின்யாருளரோகற்பநாட்டுந்
தனைநிகர்பாதலதலத்துமன்னதேயெனிற்பிறிதுசாற்றுமாறென்.

எந்நாட்டுப்பெருவளமுமெய்வெவர்கோட்பாடுகளுமியம்பவல்ல
பொன்னாட்டுப்பொன்செருக்கும்பன்னாக்குப்பணிச்செருக்கும்போக்குமிந்த
நன்னாட்டைப்புலவரெலாந்தொண்டைநாடெனவுரைப்பர்ஞாலமங்கை
தன்னாட்போதனையமுகக்கனிவாயாங்காரணத்தின்சார்பாற்போலும்.

சலதியுடைச்சேயிழைக்குத்தமிழ்நாடேமதிமுகமாத்தமிழ்நாட்டுள்ளு
மலர்புகழ்த்தண்டகநாடேகனிவாயாவதனுள்ளுஞ்சாதிபேதங்
குலவுமாருயிர்க்கெல்லாந்தத்தமதுமரபொழுக்கங்குடங்கைசேரா
மலகமெனத்தேற்றுதலினுவெலாங்காஞ்சிநகர்வண்மைசொல்வாம்.

திருநாட்டுப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௭௨.

# திருநகரப்படலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கச்சிமாநகரோர்தட்டுங்கடவுளருலகோர்தட்டும்
வைச்சுமுன்னயனார்தூக்கமற்றதுமீதுசெல்ல
நிச்சயமுறுகித்தாழ்ந்துநிலமிசைவீழுமிவ்வூரை
யிச்சகத்தூர்களோடுமெண்ணுதன்மடமைப்பாற்றே. ௧

கவினெலாந்திரட்டிக்காஞ்சிக்கடிநகராக்கிக்கஞ்சத்
தவிசினோனதன்பானுட்பத்தொழில்செயச்சார்ந்தகாலைப்
புவியிடைக்கழிந்தசேடம்பொற்பவேறெடுத்துவிண்ணா
டவிர்தரச்செய்தான்போலுமன்றிவேறுரைப்பதென்னே. ௨

ஆதிநான்முக்கணெம்மானயன்றனைப்படைத்துவேத
மோதுவித்தருளினோக்கியுலகெலாம்படையென்றேவும்
போதிதுபார்த்திவ்வாறுபடையெனப்புகன்றுவைத்தா
னீதெனலாகுங்காஞ்சியென்னுரையளவைத்தாமே. ௩

இந்நகர்நோக்குந்தோறுமிமையவர்தமதுநாடு
நன்னரென்றிருந்ததம்மைத்தாங்களேநாணிவைவர்
முன்னொருசமயந்தன்னைப்பொருளெனமூழ்கிநின்றோர்
பின்னர்வான்சைவமெய்தப்பெறினவர்பேசுமாபோல்.

நீடுமிந்நகரமன்னிநெடுந்தவமுயல்வோர்வான
நாடர்தம்பதமுங்கஞ்சனாரணன்வலாரிவைப்பும்
பாடிரிகான்றசோறுக்காண்பதிப்பதியின்வண்மை
கோடியிலொருகூறொவ்வாவவையெனக்குறித்தேயன்றே. ௫

## புறநகர் - சோலை.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சுரும்புகாலுழக்கமுகையுடைந்தலர்ந்துதுளித்ததீஞ்சுவைமதுப்பிலிற்று
மரும்பெறற்சோலைமீமிசைக்கருவிமுகிற்குழாமடவர்பாட்டளிக்கு
விரும்புதேனளியாக்கற்பகநாட்டைவெல்லுவான்வருவதோர்ந்தஞ்சித்
தரும்புகழ்வலாரியூர்தியைச்செலுத்தித்தடுத்திடைமடக்குதன்மானும்.

நறவமூற்றெடுப்பச்சிறகர்வண்டிமிருநளிபொழிலிடும்பைகூர்ந்தழுகு
குறைபடப்பொதிந்தகுயின்களைவல்லைகுத்தெழுந்துதைத்துதைத்தகற்றி
நிறைபுனற்றடத்துப்பிறழ்தருங்கிழமைநெட்டிளவாளைமீன்றனக்குத்
துறைதொறுங்கைம்மாறெனக்கனிசெழுந்தேன்சொரிவனநெடுமரப்பொதும்பர். ௭

வண்டலாட்டயரும்வாண்மருணெடுங்கண்மங்கையர்நெறிசுரிகூந்தற்
கொண்டலைக்காணுந்தொறுந்தொறுமவர்தங்கோமளச்சாயலுக்குடைந்து
தொண்டுபூண்டெதிர்நின்றுடுவதேய்ப்பத்தோகைமாமயினடங்குயிற்றும்
தண்டளிர்துவன்றிப்புதுநறுத்துளிக்குந்தளைதமலர்ச்சாகையம்பொதும்பர்.

வாம்பெருந்திரையதடம்புடையுடுத்தவளம்பொழிற்சாகைகடோறுந்
தீம்புனல்குடையுமாதரார்முன்னுட்செறித்தபட்டாடைபொன்னணிகள்
பூம்புனலகத்திற்றோன்றலுமிளையோர்புனலரமகளிரென்றஞ்சிக்
கூம்பியகரத்தராந்நலார்நகைப்பக்குலைமிசைநோக்கிவெள்குவரால். ௯

கொங்கவிழ்பொதும்பர்க்கொழுமுகையுடைந்துகுளிர்மதுச்சொரிதலினழுந்த
பங்கயச்சேக்கைமீமிசையெகினம்பைப்பயமேனிவந்தெழுவ
பொங்குவெம்பாவக்கருமுருட்டமணற்புணரியுட்சிலையுடனமிழ்ந்து
மெய்ங்கள்வாகீசரஞ்செழுத்தருளாலெழுந்துமேல்வயங்குதன்மானும். ௧௦

## யானைக்கூடம்.

கலிவிருத்தம்.

முறைமுறைபனைக்கைநீர்முகந்துவாய்மடுஉ
நிறைதடங்குறைதடமாக்குநீண்டவெள்
பிறைமருப்பொருத்தன்மாமதப்பெருக்கினுற்
குறைதடநிறைதடமாக்குங்கொள்கைத்தே. ௧௧

தாமுறையிடந்தரியலர்கட்கீந்தவர்
தாமுறையிடங்களிற்றங்கிளைக்குலந்
தாமுறப்பரிவருத்நனைசெய்வேழங்க
டாமுறைமுறைதிரிதண்டமெண்ணில. ௧௨

மழைப்புனறங்கண்மேலூற்றுமாமுகி
லுழைச்செலவெருண்டெதிரிறைப்பதொப்பநீள்
புழைக்கையினிறையநீர்முகந்துபோர்மதத்
தழைச்செவிக்கரிகள்விண்டலத்துவீசுவ. ௧௩

கழையடிச்சுவடெனுங்கனகவட்டில்வ
ணிறையவாக்கியமதநீரைச்செல்வர்போற்
சிறையளிக்குலமெலாந்தெவிட்டவுண்டுவாழ்ந்
துறைபெருவளத்தவாம்பல்வீதியே. ௧௪

கொடையினிற்கீழ்ப்படுங்கொண்டல்யாவையுந்
தடைபடச்சிறையிலிட்டாங்குச்சார்கடு
நடையிருமுறச்செவிநான்றவாய்க்களி
றடையவும்பிணித்தனவளவில்கூடமே. ௧௫

குதிரைப்பந்தி.

கரியுமிழ்விலாழியுங்காய்சினக்கடும்
பரியுமிழ்விலாழியும்பாய்ந்துசேறுசெய்
தெருவெலாமங்கலார்சீறடிச்சுவ
டுருகெழுதாமரைத்தோற்றமொக்குமே. ௧௬

சுலவுகொய்யுளையடிச்சுவடுதோறுமேற்
கலனையினுக்கசெம்மணிகதிர்ப்பன
பலசுடர்த்தகழிகள்பரப்பிவைத்தெனக்
குலவுநல்வளத்தனகுந்தவீதியே. ௧௭

மல்லலைரமயில்களைவானரங்களைப்
புல்லியமுயல்களைப்பொருசரங்களை
வல்லவாபுறக்கொடைகண்டவான்கதிப்
பல்லியற்புரவியின்பந்தியாயிரம். ௧௮

தேர்நிலை.

மதக்கரிதனைமுயல்வயங்கொள்காதையைப்
புதுக்கவீங்கிருளொளிப்பொலிவைப்பற்றியீர்த்
ததிர்ப்பதென்றுளங்கொளக்கரியவாங்குர
கதைத்தொகைபற்றுபொற்றேர்கணக்கில. ௧௯

எரிமணிச்சோதியுண்மூழ்கியீர்த்துச்செல்
பரிகளைக்காண்கிலர்பார்த்துச்சூரனார்
திருவுடையிந்திரஞாலத்தேர்கொலென்
றுருகெழச்செல்லுதேருலப்பில்வீதியே. ௨௦

வீரரிருக்கை.

நால்வகைநிலையினுற்பயிலுநாகவில்
வேல்வளைபலகைவாள்கற்கும்விஞ்சையர்
கோலவான்விஞ்சையர்குழாங்களுக்குபு
சால்பினைவியத்தகுதலைமைப்பாலரே. ௨௧

கிம்புரிபுரசைகள்கிடுகுகூவிர
மம்பொனிற்கலனைகுப்பாயமாதிய
வெம்படையேனவும்வேறுவேறுசெய்
பம்பியவினைஞர்வாழிடம்பல்லாயிரம். ௨௨

நடைநகமுதலியவுலவுநாமநீர்ப்
புடைநகாவளமிதுபுசன்றாந்திங்களே
ருடைநகமறைநிகரோதியார்பயி
லிடைநகர்வளமினியியம்பலுற்றதே. உஙா

இடைநகர்.

*அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.*

குடமுலைக்கெதிரென்றோதுங்குரும்பையைவெகுண்டுமின்னார்
பொடியிடியுலக்கைமீப்போய்ப்புடைத்தனமீளாமுன்னா
முடிமிசையதிரத்தாக்கிச்சிந்துமுப்புடைக்காய்த்தெங்கிங்
கிடரிடர்க்கெதிர்செய்வோரின்வியத்தகவெங்குமோங்கும். உச

கோல்வளைகறங்கக்கொங்கையசைதரக்குலையக்கூந்தன்
மேலணிகலகலென்னவியர்வெழவுயிர்ப்புநீள
வால்வரிப்புனைபந்தாடுமொதரார்செயல்காண்டோறுங்
கால்வரிகழலினார்க்குக்காமமிக்கூருமாதோ. உரு

தமதுருநிறத்தைவவ்வுந்தருக்கறிந்தொறுப்பார்போலத்
தமனியந்தகர்த்தசுண்ணமொருவர்மேலொருவர்வீசத்
தமனியச்சுண்ணமெங்கும்பரந்தனதவழ்தலாலே
தமனியவுலகந்தன்னையசிப்பனதடந்தேர்வீதி. உசா

எரிமணிசோதிகாலவிருள்வரவறியாமாடத்
தரிவையர்கூந்தலூட்டுமகிற்புகைநாகத்தெய்திப்
பெரிதிருள்விளைப்பநோக்கும்பெற்றியோர்தட்டுமாறு
மரீஇயினவுலகமென்னேயெனமனமருள்வராமால். உஎ

மாற்றவள்பூசையாற்றிவரம்பெறுமுறைமைகேளா
வேற்றமார்கங்கையாளுங்கம்பர்பால்வரத்திற்கெய்திச்
சாற்றருங்கச்சிமூதூர்வலங்கொளுந்தகைமைத்தாய
வாற்றல்சாலகழியாழமகலமாளக்கவல்லார். உஅ

நெடிபடுபொதும்பர்சூழநிரைதிரைக்கரத்தாற்செம்பொற்
றடமதில்பொதியப்புல்லுந்தண்கிடங்கிறைவரேவக்
கடல்களேவளையநோக்கிக்கம்பரையிறுகப்புல்லுஞ்
சுடர்மணிக்கங்கைமானுந்துளித்தநீர்தழும்புமானும். உகூ

திரையெறிதரளம்பாங்கர்த்திரண்டுவாலொளிகள்வீசிக்
குரைபுனல்குளிக்கும்வேழக்குழாத்தைவெண்கயமாச்செய்யக்
கரைமிசைக்காண்போரென்னேயிம்மையேகடவுட்டன்மை
புரைதபத்தருமித்தீர்த்தமெனவிறும்பூதுகொள்வார். ஙா0

கடம்படுகளிநல்யானைகுண்டகழ்கலக்கிக்கொட்பத்
தடங்கரையேறக்கார்த்துத்தாட்டொடர்பிணித்துப்பாக
ரிடம்படவிருபாலீர்ப்பவிருங்கடலமுதமுண்ணத்
தொடங்குநாட்சிலம்புநட்டுச்சுராசுரர்கடைதன்மான. ஙாக

நவமணிகொழித்துப்பொங்குநளிதிரையகழிநாப்பட்
கவளமாக்கடத்தயானைக்கணஞ்சுலாயுழக்குங்காட்சி
யுவர்படாப்பௌவமீதென்றுவந்துவந்தெழிலிதெண்ணீர்
சுவறவாய்மடுப்பக்கொட்குந்தோற்றமேயனையதம்மா. ஙாஉ

இத்தகையகழியென்னுமிதுவுமோர்கடலையர்க
வத்தினலிரட்டியென்றதேமெனவறைவர்மேலோர்
தத்தலைக்கடைக்கால்வட்டச்சலதியுமிஃதுமன்றச்
சுத்தநீர்க்கடலென்றெண்ணியொருமையிற்றொகுத்தார்போலும். ௩௩

புடைபயில்பொதும்பர்த்தேனும்புனன்மலர்த்தேனும்பாய்ந்து
விடையவர்க்குமையாளாட்டவருமதுவேலையொக்கும்
குடநிகர்செருத்தன்மேதிகொட்புறச்சொரிந்தபாலா
லுடைதிரையகழிதீம்பாலளக்கருமொத்தலொக்கும். ௩௪

பழமுதற்பொருள்கள்விற்கும்பாவையர்நாளுமங்கிப்
பொழுதினக்கலன்கழீஇயவண்டலாற்புனற்கிடங்கு
வழிபடுமுறைமையாளொக்கைக்காட்டுமாலியங்களொன்றுங்
கழிவுறச்சூழத்தேங்கிக்கிடந்ததேகடுக்குமன்றே. ௩௫

பாசடைக்கவயம்போர்த்தபகைஞரோடிகலித்தாலும்
பூசலைவிளைப்பவன்றோர்க்கணைபொருபுரைகடோறுந்
தேசுறவெழுந்தசோரியாலெனச்செய்யகஞ்ச
மூசுவண்டயின்றார்ப்பமொய்த்துளதகழிதெண்ணீர். ௩௬

அணிமலரழகேநோக்கியகழியுளிழிகின்றோரும்
கிணியுறுமுட்கொடுமைநோக்கிச்சேயிலைவிலகுவோருங்
கணிகையர்கோலநோக்கிக்காதலித்தகப்பட்டோரும்
பிணியுறுமுட்கருத்துநோக்கிவெரீஇப்பெயர்ந்தகல்கின்றோரும். ௩௭

மதில்.

கலிநிலைத்துறை.

கம்பையைத்தடுத்தபின்புகம்பனாரமைத்தலும்
பம்பியார்த்தொருங்குபௌவமேழுமுற்றுமாறுணர்ந்
தம்பையண்டபித்திகாறுமாக்குமாத்தடைபொர
வம்பலர்க்கிடங்குசூழ்ந்தமல்லலிஞ்சியோங்குமே. ௩௮

திருக்கிளர்ச்சியிற்செருக்குதேவநாடுபாதலத்
தருக்குநோக்கிவஞ்சினந்தலைக்கொள்காஞ்சியவ்வலி
முருக்கவெண்ணிமுன்புபோய்வளைப்பவேவிமூண்டென
மருக்கிடங்குமிஞ்சியும்வியத்தகும்வளத்தவே. ௩௯

கிடங்கினெல்லைகாண்பதன்றுகீழுமேலுமாகநீள்
விடங்கர்தாளணிந்தவின்றுநோக்கமேவியப்பதிற்
றடங்கொளெல்லைகாண்பதுந்தலைவர்தஞ்சடைத்தலை
யிடங்கொள்வெண்டலையலாமலெவர்காணவல்லரே. ௪௦

கச்சிவாணர்சென்னிதாள்கள்காணமுன்பறந்தகழ்ந்
தச்சழிந்தமால்விரிஞ்சரன்றுசென்றவெல்லைக
ணிச்சயிப்பவவ்வளவமேகவைத்தநீள்குறி
நொச்சியுங்கிடங்குமென்னநோக்குவார்க்கிலங்குமே. ௪௧

இடித்தகழ்ந்துதம்மிருக்கையெற்றிநீர்க்கிடங்கினில்
வெடித்தெழுந்துதாவுவாளைமீனைமீண்டுறுவ்வகை
யடுத்துவிக்கவுண்டுதேக்கியம்பரத்துமீனையுந்
தடுத்துவென்றிகொள்ளவுள்ளசார்மதிற்பொறிக்குலம். ௪௨

உடல்படைத்தியக்கவோர்நிமித்தனுண்டெனக்கொளத்
திடம்வலித்தசான்றதாயவனர்தாட்செயப்படுங்
தொடர்புடைப்பொறிக்குலஞ்சுழன்றெழும்விழும்பகை
மிடல்கெடத்தெழிக்குமோடுமீளுமின்னநீரவே. ௪௩

இம்மதிற்பொறிக்குலமெதிர்த்துளோர்தமைச்செருத்
திம்மெனுமுன்வென்றிகொள்ளுமீதுணர்ந்துதெவ்விர்கா
ளம்மவீண்டுறேன்மினென்றுகையெடுத்தசைப்பபோ
லம்மதிற்றலைத்துகிற்கொடிநுடங்குமாலரோ. ௪௪

கலிவிருத்தம்.

வளமகன்றிருநகர்க்கிழத்திமாமைசா
லிளமுலைதிளைப்பக்காரெழினிசேர்த்துபு
தளர்வறநாட்டியதம்பமேயெனக்
கிளர்மதிலிடந்தொறுஞ்செறியுங்கேதனம். ௪௫

நேமிமால்வரைமிசைக்கிளைத்துநீண்டவே
யாமெனக்கொடிமிடையம்பொன்மாமதின்
மீமிசைக்கோபுரமேலுஞ்சேறலால்
யாமினிப்புகல்வதற்குவமையில்லையே. ௪௬

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மகதநாடென்னக்காஞ்சிவைப்பினுங்கடைகுறெய்தி
யிகலறவளர்க்குமெண்ணுன்கறத்தினுக்கிடர்செய்யாமைத்
தகையணங்குமையாள்வைத்ததடைநிகர்மதிற்சிற்றூற்றும்
புகரறவியம்பப்புக்காற்புலவர்க்குமுலப்புறுதே. ௪௭

மிடையுறத்தூர்களெல்லாம்விண்ணவர்நகராவங்கட்
புடைநக்ரயனூராகப்பூமகள்கொழுநன்மன்னூ
ரிடைநகராகமற்றையீசனூருலகமேயா,
நடைபிறழாதகீர்த்திபடைத்தவுண்ணகாரஞ்சொல்வாம். ௪௮

அகநகர் - பரத்தையர் வீதி.

அளிமதனூலினுற்றுலாடவர்தம்மோடாடிக்
களிமனைக்குள்ளாற்றுங்கள்விளைத்திடுங்கலவியெல்லாந்
தெளிதரமாடந்தோறுஞ்சித்திரந்தன்னிற்காட்டி
யிளையுரைமயக்கிக்காமமேற்றுவோர்சேரிமல்கும். ௪௯

வரியளிமுரலாவாடாமாலையவிமையாநோக்க
தரைமிசைத்தோயாத்தாளசித்திரந்தயங்குகாட்சி
வரைவிலாமகளிரின்னோர்மாணலம்வேட்டுவானிற்
சுரர்களுமெய்திச்செவ்விபார்த்துறைதோற்றமொக்கும். ௫0

பூத்தபினிராறுநாளுங்கிழத்தியர்ப்புணர்ந்துதம்மை
நீத்தனரெனுஞ்சீற்றத்தாணின்றவீரொன்பானூ
மேத்துமாடவரைத்தங்களிளமுலைத்துறுக்கமேற்றிப்
பாத்திருநிதியமெல்லாம்பறித்தனர்தொள்ளைகொள்வார். ௫௧

கோலத்தினிசையின்யாணர்க்கூத்தினின்விநயத்திற்
சீலத்திற்கலவிச்செய்கைத்திறத்தினிற்பிறவாற்றானு
ஞாலத்துமைந்தர்தம்மைமருட்டிநற்பொருள்கள்வவ்விக்
காலுற்றசாற்றுவேழக்கோதுபோற்கழியநீப்பார். ௫௨

அலகினல்லறஞ்சூழ்காஞ்சியமர்பெருஞ்செல்வராயுங்
குலமுறைச்சார்பால்வெங்கோய்க்கோட்பட்டாரிழிஞரேனுஞ்
சிலகொடுப்பனவுங்கொண்டுசேர்ந்துபொய்வஞ்சமெல்லா
நிலைபெறவடைத்துவைத்தநெஞ்சினராகிவாழ்வார். ௫௩

அலைவிழிக்கணிகைநல்லாராடவர்தமக்குநல்கு
மிலைநிகரெனுமின்பத்திற்கின்பமுஞ்சமமாக்கொண்டு
விலையெனநிதியுங்கோடல்வியப்பிற்றேயேற்றமாக
மலைநிகர்தனங்களீந்தோர்மலைநிகர்தனமுங்கொள்வார். ௫௪

தவமறைக்கிழவன்மாயன்ருணுவென்றிவருமிவ்வூர்க்
கவர்மனப்பரத்தைமாதர்கண்வலைப்பட்டேயின்று
மிவறியவலரோன்மாலோன்பித்தனென்றிப்பேர்பெற்றார்
சிவசிவயாவரேயோவவர்கிறத்தகப்பட்டார். ௫௫

விற்றிடுமெல்குறங்கினைமீள்வுந்தாமேயாக்கி
மற்றையநாளும்விற்கும்வரைவிலார்வீதியிச்சீர்
கற்றிலாவணிகமாக்களாவணக்கவினைநோக்கிப்
பற்றுவெண்பாளக்கோவைபத்தியாற்சிரிக்குமன்னே. ௫௬

இருமைவாணிபத்திற்கூர்த்தமதியருமிறும்பூதெய்த
வருவமாமின்பந்தன்னையிம்மியினளவுமேறா
துருவமாம்பொருளுக்கேற்பநிறுத்துவிற்றொழுகவல்ல
விருமனப்பெண்டீர்தம்முட்டருக்கிவாழிருக்கையீதால். ௫௭

ஆவணவீதி.

இன்னவீங்குளவோவென்னக்கடாதலுமியம்பியோர்கட்
கன்னவிங்குளவில்லென்றிறுத்தலுமறியாதியாரு
மென்னவுந்தருதிரென்னவிலைகொடுத்தேற்பவீய
மன்னியெப்பொருளுமென்றுநிறையுமாவணமனந்தம். ௫௮

செய்வினையனைத்துந்தன்பாற்சேர்த்துவைத்துயிர்க்குப்பின்னா
ரவ்விறையாணையாற்றாலளித்திடுமாயையேபோற்
கொய்வளம்வருவமுற்றுங்கொண்டுபின்னுய்கர்மாறப்
பௌவநீருலகுக்கெல்லாமுதவுவபைம்பொன்மாடம். ௫௯

அணங்கனார்பரப்பிவிற்குமணிகிளர்கோங்கந்தாரிற்
சுணங்கினைக்கணியென்றஞ்சிச்சுரும்பினமுறாமைநோக்கிப்
பணங்கிளர்பாந்தளல்குற்பாவைமீரென்னேபொற்பூ
மணங்கமழ்கின்றதென்பாராடவர்மருட்சியெய்தி. ௬0

வீழ்பொருளெடுக்கலாற்றாவுறுசனமிடைந்தவீதித்
தாழ்குழன்மடவார்மைந்தர்தங்களுண்முட்டுங்காலைத்
தாழ்மணிமுலையுந்தோளுங்கலந்துறவுவகைபொங்கி
வாழ்நருஞ்சிலரேபல்லோர்வாடிநைந்தழுங்குவார்கள். ௬௧

கலிநிலைத்துறை.

நெருங்குபல்சனமுழக்கருக்கூலநீல்விடத்தைக்
கரந்தகம்பர்மேற்றெழித்துறுங்கடல்பெருந்திருவாழ்
சுரந்துவந்துநாற்புறத்தினுஞ்சனமிகத்தொகுவ
பரந்தவீரையுட்புகுந்திடும்பற்பலநதியே. ௬௨

மற்றையவீதி.

அறத்தினீணகர்புவனேசக்கரமெனவான்ற
திறத்தபொன்மதிலேழுடைச்சின்மயக்கோயிற்
புறத்தவான்மிசைப்புலவர்கண்ணூறுபட்டிடாமை
மறைத்தெனக்குயிலுரிஞ்சுபூம்பந்தர்சான்மறுகு. சுஙு

மகரப்பொற்குழைப்பிரான்றளிசூழ்மதில்குறடு
நகரச்சீரெயில்சுற்றுமாளிகைநிரையாருந்
திகழச்சூழ்தெருவாரிடைவெளியுமாய்ச்சிவன்றோர்ச்
சகடத்தேருடைச்சகடமற்றென்றொளாத்தயங்கும். சுச

சரிக்குங்குஞ்சரமதப்பெருங்கலுழியுந்தளவைச்
சிரிக்குமூரலார்களைந்ததார்நறவமுஞ்சேறாய்ப்
விரிக்கும்வீதியிலடிவழுக்காவகைவெயிலைப்
புரிக்குஞ்செம்மணிபதித்துமேன்டப்பாரம்புரியோர். சுரு

தெள்ளற்பாய்கரினறியநீர்வண்டலாட்டயரு
மள்ளற்சேறுகள்புலர்த்துவானிடையிடையகழ்ந்து
பள்ளத்தாற்சிறுகால்பலவகுத்தெனப்பிறங்கும்
வள்ளற்காவலர்செலுத்துதேர்ச்சகடுபோம்வழியே. சுசு

செய்யதிண்புயத்தெழிலினைக்கவர்ந்தமைதெரிந்து
வெய்யமாந்தர்கள்வெதும்புறப்பன்முறைதாக்க
வையவோவெனவலறுவபோலணிமுழவ
மையவேலையுஞ்சமழ்ப்புறவயின்றொறுங்கறங்கும். சுஎ

விலாழிநீருமொண்சந்தனவிரைச்செழுஞ்சேறுங்
குலாயவீதிகால்வழுக்குமென்றஞ்சுபுகோண
னிலாமுடித்தவர்திருவிழாத்தொழவர்துநெருங்கும்
வலாரியாதியோரடிபடியுருவகைகடப்பார். சுஅ

புரசைத்திண்களிறுலாத்தரும்பொலஞ்சுடர்மறுகிற்
பரசப்போதருமன்னவர்பணிமுடிநெருக்கி
னரசப்பன்மணிதெறித்துவீழ்ந்திமைப்பனவவியா
முரசப்பேரொலியதிர்ப்பினிலுக்கழுதுடுப்போல். சுகூ

அங்கண்வீதியினணிநலங்காணுமாதரத்தி
னெங்கணுதனுந்திருவிழாவென்பதோர்பெயரான்
மங்கையாளொடுமெகாரொடும்வானவர்பழிச்சத்
திங்கடோறெழுந்தருளுமேலதன்வளஞ்சிறிதோ. எ0

மாளிகை.

பாலியேமுதல்பலநதித்திவலைபாய்ந்தழகின்
பாலவாயமாளிகையடித்தலத்தினைப்பாராப்
பாலவெண்சுதைமாடமேற்சிகரமும்பனிவின்
பாலியாற்றுநீர்த்திவலைகள்போர்ப்பவான்படரும். எக

பன்னிறப்பரிகருங்கரிதொழிலமைபஃறே
ரின்னகீழ்நிலைவர்யினினியந்குதனேக்கி
மன்னுமேனிலைவாயில்வெண்கரிபசுமான்றே
ரன்னவேனவுந்தன்னிடத்தியங்கவானணவும். எஉ

அலங்குகீழ்நிலைமாடமங்கடுப்பினின்மாட்டு
மிலங்ககிற்புகையான்விரையேற்றுவர்மடவார்
புலங்கொண்மேனிலைமாடமும்புரிகுழற்கூட்டுந்
துலங்ககிற்புகையான்மணங்களுலுறத்தொகுப்பார். ௭௩

இருசுடர்ப்பெருஞ்சிலைகளினியன்றமாளிகைக்க
ணுருகுவெங்கதிர்தடவரச்சுடுகனலுமிழு
மருகுதண்கதிர்தடவரக்குளிர்புனலளிக்கு
மருவினோர்க்குணம்பிடிபடல்வையகத்தியல்பே. ௭௪

நெறித்தகூந்தலார்மேனிலைச்சாளரக்கதவு
திறத்தலுந்நடைபடுமகிற்புகையெலாந்திரண்டு
புறந்தினேகுவவழுதிதன்சிறைப்படும்புயல்கண்
மறித்துவிட்டநாள்விரைந்துவிண்சேறலைமானும். ௭௫

தெரித்தபன்மணிமாடமேற்றிகழ்ந்தபொற்குடத்து
விரித்ததன்கதிர்க்கடவுணின்றசைதல்வேட்கோவர்
திரித்துவிட்டசக்கரமெனலாகுமத்திகிரி
பரித்தபச்சைமண்ணெனலாமதற்பயில்களங்கம். ௭௬

நிரவுநித்திலத்தோரணச்செழுங்கதிர்நிரைகள்
விரவிவிண்ணெலாம்வெள்ளொளிவிரித்தலானன்றே
பரவைமேலெழும்போதும்வீழ்பருவத்துமல்லா
லிரவிமண்டிலச்சேயொளிவிளங்கிடாவியல்பே. ௭௭

திங்கள்செய்கதிராளனென்றுரைப்பதேதேற்ற
மங்கணித்திலத்தோரணத்தொளியினிலரிபோற்
றங்கிவெண்கதிராயினதற்குறுஞ்சான்று
துங்கமாலையுங்காலையுஞ்சிவந்துதோன்றுவதே. ௭௮

அணங்கனார்நகைத்திடுந்தொறுமாங்கவர்வளர்த்த
கணங்கொண்முல்லைகண்முகைப்பனவவர்நகைக்கவினை
யிணங்கினாங்கவர்ந்தொளித்தமையறிந்தனரென்றே
வணங்கினாணினாலுடன்சிரித்திடுவதுமானும். ௭௯

ஆடகத்தியன்மேனிலைமிசையணங்கனையார்
மாடகத்தனியாழிசைக்குவந்துறும்வான
நாடகத்துவெண்களிற்றினைநளினமென்மலர்ப்பூம்
பாடகத்தடிநடையினாற்பருவரலுறுப்பார். ௮0

பளிக்குமேனிலத்தந்நலார்பணைமுலைநெருங்கக்
களிக்குமாடவர்தமைத்தழீஇக்காமப்போர்க்கலவி
யிளைக்குமாற்றலைக்குரவனில்விழைந்தவனொருசா
ரொளித்திருந்துகாண்பானெனச்சுருங்கையுணுழையும். ௮௧

மேனிலத்தரமியத்திடைத்துயிலுமெல்லியலா
ரானனத்தெழில்கவர்ந்துசென்மதியினையவர்தங்
கானலர்க்குழற்காரளியின்றொடர்ந்துதைப்ப
வீனமுற்றவத்தழும்புவான்கறையெனவிலங்கும். ௮௨

உங்கண்மாதரார் முக்த்தெழிலுேக்கியோர்வடிவங்
கங்கணுன்குளான்படைத்ததிலவயவங்காண்பா
னங்கண்முன்னுறவகுப்புழியஞ்சனங்குலையப்
பங்கமுற்றதென்றெழுதித்ததைமதியெனப்பகர்வார். அ௩

இவ்வரைப்பினிலிரவியுமதியமும்வழியே
செவ்வனேகுறுதொதுங்குவவிவர்முகச்சீர்க்கும்
பவ்வநேரகலல்குற்கும்வடிவொடுபணைத்தே
ரொவ்வுறுமைகண்டுட்கொளுமுட்கினுலன்றே. அச

தங்கள்வாண்முகமதியெனச்சார்தரும்பணிக்குத்
துங்கமாடமேன்மின்னனுர் வேற்றுமைதோற்றத்
திங்கண்மாட்டறிகுறியொன்றுசெய்துவைத்தனரா
லங்கண்மாநிலங்களங்கமென்றிடப்படுமதுவே. அரு

மறைந்திடாமறுப்பயின்மதிமுகத்தெழில்பெறுது
குறைந்துபார்க்குமங்கரிவைமார்கோணுதல்கடுப்ப
நிறைந்துபார்க்குமீண்டவர்முகநிகர்ப்பமற்றிவ்வா
றறைந்ததிங்கடோறலமருமக்கரைப்பசுப்போல். அசு

கதிர்செய்மாடமேற்புலவிநீர்கலவியின்முடிவின்
வெதிர்செய்தோளியர்கொண்கர்தம்மருமமேல்வதனம்
பதியவைத்தனர்துயிலுவரற்றம்பார்த்திருந்து
புதுமுகத்தெழிலுடுபதிவெளவுறும்பொருட்டே. அஎ

தேங்குமூடலின்மாதரார்பறித்தெறிசெங்கே
ழோங்குபன்மணியவரடிவருந்தினைந்துளா
வாங்குநாடொறும்பைதுறத்தவிர்வனகொடூதாத்
தாங்கள்செய்வினைதங்களுக்கேபகையாமே. அஅ

விருந்துநாடொறுமிடையறுதெதிருமேதகவா
லருந்திறற்சிறுபுதல்வர்சூழ்ந்தணுகிடுந்திறத்தான்
முருந்துமூரலார்க்காயிடைக்கொழுநர்பான்மூண்ட
மருந்திலூடலுஞ்சிறுவரையன்றிமேவாதால். அகூ

மேனிலத்துவந்துலாவிடுங்கடவுண்மெல்லியலார்
தாழ்நிலத்துறுங்கூவல்கணேக்கிநந்தமைப்போற்
கீழ்நிலத்தவர்தாமுமிங்கெய்தினர்கொலிஇப்போ
மூழ்நிலைத்தபல்பிலங்கொலாமுவையெனவியப்பார். கூ0

கலிவிருத்தம்.

காலமன்றிக்கனிவுறமாத்தளைக்
கேலவான்புகையேற்றுதல்போன்மினூர்
சாலவெம்முலைச்சார்ந்தம்புலர்த்திடு
நீலதூமமிர்ந்தெழுமெங்கணும். கூக

கொன்னும்வார்குழற்கூட்டுங்குரூஉப்புகை
யங்கலாரைப்பொதிவதவர்தமைத்
தன்னினீங்கியுமின்னெனத்தண்முகி
லுன்னிவந்துவளைந்திடலொக்குமே. கூஉ

வார்கொள்கொங்கைமலர்க்கணேயேறிடு
மேர்கொடொய்யிற்கருப்புவிலேந்துவார்
தார்மலர்க்குழனரியர்தாங்கடாம்
வீரவேள்படையென்றறிவிப்பபோல். ௯௩

நாறுதோட்டுகளினமிரண்டினின்
மாறிமாறிவீழ்வண்டினமாமெனக்
கூறுமாதர்குழிஇயிருந்தாடுசீ
ரேறும்மனைப்பாட்டிசையெங்கணும். ௯௪

தங்கள்பண்மொழிக்கொக்குந்தகைமையை
யங்கணுய்பவரேய்ப்பவணிமலர்ச்
செங்கைமெல்விரல்சேர்த்தித்திவவியா
ழெங்குமங்கையர்பாடுவரெண்ணிலார். ௯௫

வேறு.

கொங்கையினைதிருறக்கூசினுலெனப்
பொங்கொளித்தாளம்பின்னொலிப்பப்பூவைமார்
மங்கலச்சதிநெறிவழாமலாடரங்
கெங்கணுநூபுரத்திசையினீட்டமே. ௯௬

மைந்தர்பந்தெறிதலுமாடப்பித்திகை
சிந்துவபன்மணிசெழியன்சென்னெடுந்
துந்தியன்றேச்சலுமலப்பிலாநிதி
தந்திடும்வடதிசைச்சாரற்குன்றுபோல். ௯௭

மணிப்பொலம்பூட்சிறார்விடுக்கும்வான்படந்
தணித்தொறும்விடுந்தொறுந்தணிந்துநீள்வன
கணிப்பருநந்திநெட்டுயிர்ப்பின்காற்றிடைப்
பணிப்பனமுன்னுழல்பரிசுகாட்டுமே. ௯௮

மாடமேற்சிறுமகார்விடுக்கும்வண்படம்
பாடல்சாலிருசுடர்தம்மைப்பற்றுவா
ரூடினதிரிதருநாகமென்னவு
மாடுவவிசும்பிடையமார்நோக்கவே. ௯௯

அட்டிலிற்குய்ப்புகையணங்கனார்குழற்
கிட்டிடுமகிற்புகைமகத்தெழும்புகை
முட்டிமேற்பரந்தெங்குமொய்த்ததோர்கிலார்
வட்டவான்செழும்புகைவண்ணமென்பரே. ௧00

வேள்விச்சாலை.

இந்திரனூர்தியிங்கெய்தித்தன்முடிச்
சுந்தரஞ்சிதைதரத்துதையச்சிறித்தன்
மந்திரப்புகையினல்வலாரியூழெழில்
சிந்திடச்செய்வசீர்வேள்விச்சாலையே. ௧0௧

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆகுதித்தழலினறுதொழிலாளருமறைமனுவெடுத்தோதி [ன்டு
யோகையிற்சொரிநெய்தெறித்தெழும்பிதிர்வுமொலிபடுபுலிங்கமுங்கொ
மேகமாய்ப்படர்ந்ததூமமேயிடித்துமின்னிநீர்பொழிவனபோலு
மீகைசால்வேள்விமறுத்துழிமாரியின்மையேயிதற்குறுசான்றால். ௧0௨

அந்தணரிருக்கை.

பூசுரப்பெயரினிருமொழிப்பொருட்குமுரிமைபூண்டுறுநிலைக்கேற்பக்
காசினிவரைப்பினுடொறும்வழாதுகமழ்சுவையடிசிலானதிதி
பூசையும்வேள்வியவியினாற்கடவுட்பூசையுமொருங்குசெய்கடப்பா
டாசறவாற்றும்பார்ப்பனவாகையறிஞர்வாழிடம்பலவவண. ௧௦௩

அரசரிருக்கை.

தகைபெறுவலியாற்றெம்முனைமுருக்கிக்காவற்சாகாடுகைத்தெங்குந்
திகிரியொன்றுருட்டிமுறையுளிசெங்கோல்செலுத்துநர்கள்வர்மற்றுயிர்கள்
பகைவர்தாந்தமரென்றிவ்வயினெய்தும்பயநதடுத்துலகெலாம்புரக்கு
மிகுபுகழ்படைத்தவரசியல்வாழ்க்கைவீரர்வாழிடம்பலவவண. ௧௦௪

வணிகரிருக்கை.

மேதகுவிரிஞ்சனரும்பெறற்குறங்கிற்றவிழைதகையாயெனப்படைத்தோ
ரேதிலர்பொருளுந்தம்மபோற்பேணிவாணிபமீட்டுநர்வடாது
மாதிரத்தலைவன்புறங்கொடுத்திரியும்வளத்தினார்மறைநெறியொழுக்க
மாதரித்துயர்ந்தவிழுக்குடிவணிகரமர்ந்துவாழிடம்பலவவண. ௧௦௫

வேளாளரிருக்கை.

முருகுயிர்த்தலர்ந்தமலரவன்றனதுமுகமுதலுறுப்பெலாந்தாங்கிச்
சரணமென்றுரைக்குமுறுப்பினிற்றோன்றிச்சாற்றுமம்முகமுதலுறுப்பின்
வருமொருமூவர்தங்களையுழவின்வண்மையாணிலைபெறத்தாங்கு
முரியவேளாண்மைபூண்டபேர்தமக்கேயுடையவரிடம்பலவவண. ௧௦௬

அனுலோமர்முதலியோரிருக்கை.

நால்வகைவருணத்துயர்குடிப்பிறந்தநல்லவரிருக்கையைச்சூழ்வ
சால்புறுமவரிலுயர்ந்தவரிழிந்தோர்தங்களுட்புழ்இமணந்தளித்த
பால்படுமேனைச்சாதிபேதத்தோர்பலர்களுந்தத்தமநெறியின்
சீலராய்த்துவன்றிமரபுளியொழுகுந்திருமலிபல்வகைக்குடியே. ௧௦௭

கழகம்.

வளரிலைத்தருப்பைநுனியெனக்கூர்த்தமதியினர்தொன்றுதொட்டுடைய
பளகறுகேள்விப்பயிற்சியர்மேற்கோண்முதற்பகர்மூன்றினுந்தெருட்டி
யிளையருக்குணர்த்துமிலக்கணநெறியோரிருபுலமையர்தம்முட்
களவிகலிகந்துழாங்குழாமாகிக்கலைதெரிகழகமும்பலவால். ௧௦௮

சைவமடம்.

காமனைமுனிந்துநெடுஞ்சடைதரித்துக்கவின்றகல்லாடைமேற்புனைந்தி
யாமெலாம்வழுத்துந்துறவியென்றிருந்துமொருத்திதனிளமுலைச்சுவடு
தோமுறக்கொண்டாரெனச்சிறைபிடல்போற்சுடர்மனக்குகையுளேகம்பத்
தோமொழிப்பொருளையடக்கியானந்தமுறுநர்வாழிடம்பலவுளவால்.

திருக்கோயில்.

இருண்மலந்துமிக்குஞ்சிவாகமமுறையினிருபாதமுமனுட்டித்
தருள்பெறுமாதிசைவர்களாதியவாந்தரசைவரிருமேனார்
மருவிவாழ்மாடமாளிகைப்பத்திமருங்குடுத்துயர்வனப்பினதாற்
றெருட்டருமனுதிசைவர்வீற்றிருக்குந்திவளொளிப்புரிசையேகம்பம். ௧௧௦

### திருமதில்.

கலிவிருத்தம்.

விண்ணுழிவுறநிமிர்வீறடக்குவா
னண்ணலாணையினிமிலூர்தியாண்டுறீஇ
யெண்ணிலவுருவுகொண்டிருந்தநீரதே
பண்ணமைமதின்மிசையிடபப்பந்தியே. ௧௧௧

### திருக்கோபுரம்.

ஒன்பதுகோள்களுமுலாவிவைகுவா
னொன்பதுபாடமங்கூழிற்செய்தென
வொன்பதுமணிகளினியன்றவொண்மைசா
லொன்பதுநிலைதழீஇயோங்குங்கோபுரம். ௧௧௨

கார்முகிலுடுக்கையாக்கதிரின்வானவன்
மார்பணிமணியதாவட்டமாமதி
சீர்நுதற்பூதியாச்செல்வக்கோபுரம்
பார்புகழ்புருடனிலோங்கும்பான்மைத்தே. ௧௧௩

நச்சியேகம்பரைத்தொழுநாடொறுங்
கச்சியில்வாழ்பவரிறுதிக்காலையி
லச்சிவலோகத்தையணுகவைத்ததோர்
பொச்சமிலேணியும்போலுங்கோபுரம். ௧௧௪

பரிதியினிழல்செயக்கதிர்க்கும்பன்மணித்
திருவியல்கோபுரச்செல்வவாய்தலின்
முரசுகாலந்தொறுமுழங்குஞ்செவ்வியென்
றருகுறுவமரரையழைத்தன்மானவே. ௧௧௫

### விடைக்கோடி.

மடுத்தவைம்பாசமாவரணமைந்தனுந்
தடுத்தருள்கோயிலிற்றம்பிரானெதி
ரெடுத்தபூங்கொடிமிசையிடபம்வான்மிசை
யடுத்ததோரிடபத்தோடளவளாவுமே. ௧௧௬

### விமானம்.

தங்குலத்திறைவிசெய்பூசைச்சால்பினை
யங்கணன்மகிழ்வொடுங்காணுமாசையி
னெங்குளவரைகளுமீண்டிருந்தெனப்
பொங்கெழிற்சிகரங்கள்பொலிந்துதோன்றுமால். ௧௧௭

### மண்டபம்.

கன்மநோய்குடைபவர்கடப்பச்செய்திடும்
பன்மலர்துவன்றியதீர்த்தப்பாங்கரிற்
பொன்மலர்மண்டபம்பொலிந்துதோன்றுவ
தென்மணிப்பேழையைத்திறந்தமூடிபோல். ௧௧௮

### வேள்விச்சாலை.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சேந்தபொற்குண்டத்தோங்குஞ்சிகைத்தழன்மிசையேகம்ப
வேந்தையாவாகித்தேத்தும்புகைபொதிவேள்விச்சாலை
யேய்ந்தசீர்த்தகரவித்தைமுறைப்படியிதயகஞ்சப்
பூந்தழற்சிகைமேலீசற்போற்றுமாயவனையொக்கும். ககக

### மாழலத்தோருவர்.

கோழரைகாம்பாச்சாகைவட்டமேற்குடையாப்பொற்பின்
வாழியவொருமாமீதுவளநிழல்கவிப்பவாங்க
ணூழ்முறையுயிர்கட்கெல்லாமைந்தொழிலோம்பியெம்மா
னூழ்புனலுலகமேத்தவாசுவீற்றிருக்குமன்றே. சஉ0

பற்பலதேயமெல்லாம்பாங்குடைத்தொண்டைநாடு
பற்பலசங்கநாப்பட்படர்வலம்புரியாமங்கட்
பற்பலநகரமெல்லாம்வட்டமாப்படைத்தகாஞ்சி
பற்பலவலம்புரிக்குட்சலஞ்சலப்பணிலமாமால். கஉக

அத்திருக்காஞ்சிவைப்பினலகிலாத்தலங்கடம்முட்
பத்திசேர்மாடக்கம்பம்பாஞ்சசன்னியமாமந்த
வுத்தமச்சுரிமுகத்துள்விலைவரம்புணராச்சாதி
முத்தமேயொருமாமூலத்திருந்தருண்முக்கண்மூர்த்தி. கஉஉ

பன்மணிவெயில்கள்கான்றுபடரிருள்சீப்பவட்டப்
பொன்மதிற்சூழ்ந்துநாப்பட்சதாசிவப்புத்தேள்வைகுந்
தன்மையாற்கச்சிமூதூர்தரைமிசையுயிர்கள்செய்த
கன்மமோர்ந்தளிப்பான்வந்தகதிர்செய்மண்டிலமேயாமால். கஉ௩

விலக்கிலாவறநூல்சொன்னமுனிவரும்விதிவிலக்கா
மிலக்கியமிதன்பாற்கண்டேயிலக்கணம்விதித்தார்போலு
மலக்கணீத்தறமெண்ணான்குமம்பையேவளர்க்குநீராற்
கலக்கமிலறங்கட்கெல்லாமாகரங்காஞ்சியன்றே. கஉச

உவரிசூழுலகவைப்பினுரையமைகேள்விசான்ற
கவிகளென்றுரைப்போர்தம்முட்காஞ்சியைப்புகழாரில்லை
யவரெலாம்புகழ்ந்துமின்னுமுலப்புறுவதன்சீர்முற்றுஞ்
சிவநிறைகல்விசாலாச்சிறியனோகிளக்கவல்லேன். கஉரு

இத்திருக்காஞ்சிவைப்பிற்பலதளியிடத்துமேவி
யத்தர்குகம்பவாணரவரவர்க்கருளிச்செய்த
வுத்தமக்காதையெல்லாஞ்சூதனன்றுரைத்தவாறே
முத்தமிழறிஞர்தேறமொழிபெயர்த்துரைப்பேனுய்ந்தேன். கஉசா

திருநகரப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - உகூ௪.

# பதிகப்படலம்.

## முதற்காண்டவுட்டோகுதி.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சிவபரஞ்சுடரைக்காண்டகுமோதுச்செய்தவர்வினவியவாறுந்
தவலருஞ்சிறப்பினந்தியெம்பெருமான்சனற்குமாரனுக்குவெஞ்சாப
நவையறுத்தருளிச்செவியறிவுறுத்தநலமெலாஞ்சூதமாமுனிவ
னவர்தமக்கியம்பிப்பிஞ்ஞகனுமையாட்கருளியவுண்மைசெப்பியதும். க

கன்னியாழ்க்கிழவன்வரம்பெறுகாரைக்காட்டினிற்பூசனையுஞற்றி
மின்னவிர்மணிப்பூட்சிவிபெறுமகவான்வீடுபேறெய்தியவாறும்
பொன்னுடைப்புத்தேள்புண்ணியகோடிப்புனிதனையருச்சனையாற்றி
யன்னவேறுகைக்குமன்னணமேலோடுலகையுண்டுமீட்டுதவியவாறும். உ

அத்தகுமாயோன்வலம்புரிக்களிற்றையடியிணைவணங்குபுகனைது
கைத்தலத்திழந்தசெம்மருள்சிலேப்பிற்கதிர்வளைதனைப்பெறுமாறு
மெய்த்தபோன்மலர்மிசைக்கடவுள் வேள்விசெய்துயர்சிவாத்தானத்
துத்தமனருளான்மாயனோடுலகையுண்டுமீட்டுதவியவாறும். ங

கருகிருள்விடத்தைக்கிறையவன்பருகக்காட்டியவுறுக்கடைதணப்ப
விருமறைவிதியாற்கடவுள்மணிகண்டேசனையேத்தியவாறு
மருளுறுசெருக்கிற்பொய்புரைகிளந்தவல்வினைகழிதரவியாதன்
பொருவருஞ்சாந்தாசயப்பெருவரைப்பிற்பூசனையியற்றியவாறும். ச

வீட்டினைவிழைந்தேழ்முனிவருற்பூசைவேறுவேறியற்றியவாறுங்
கோட்டமில்கொள்கைப்பராசரமுனிவன்றொழுதுதன்றந்தையர்க்கொன்று
மாட்டியவரக்கன்குலத்தொடுமடியச்செற்றதும்விளக்கொளிமாயோ
னாட்டமூன்றுடையநாதனைப்பரவிநந்திதுதித்தோம்பியவாறும். ரு

ஈண்டியபுகழ்முத்திச்சரம்பரசியின்றவள்சிறையினைவிடுவித்
தாண்டகைக்கழுமனுஞ்சுமல்கேயிற்றப்பணிகளையலைத்தெழுமாறு
நீண்டவனுணராந்திருவடிபோற்றிநெளிபடம்பணிகளுமெம்மான்
பூண்டுகொண்டருளப்பெற்றபோதகவாற்புள்ளினைவினவியவாறும். சு

இறுதிநாளிருவர்காயமேற்றுங்கிவியாழமுமியமனும்வழுத்த
மறுவறுகாயாரோகணவரைப்பினெம்பிரான்மன்னியவாறு
மறுகணிவேணியுஞ்சணிக்கூத்தரடியிணையருச்சனைசெய்து
தெறுபுலனவித்தசித்தரெண்ணரியசித்திபெற்றுய்ந்திடுமாறும். எ

மாதவன்பரசிப்பிருகுவன்சாபவன்பயந்தபப்பெறுமாறு
மேதகுமொருசார்முனிவரர்மதங்கன்வெண்கரிபோற்றியவாறு
போதமில்வெள்ளிமொழிப்படித்ததிசியிட்டசித்தீசனைத்தொழுது
கோதறுவயிரயாக்கைபெற்றேருங்கிக்குபன்றனைப்புறங்கண்டவாறும். அ

அந்தணன்கச்சபாலயத்திறைஞ்சிப்படைத்திடுமாற்றல்பெற்றதுவும்
பைந்துழாய்க்கூர்மமாயிடைப்பரசிப்பாதுகந்தவிர்ந்துய்ந்தவாறு
மைந்துறுமாண்டுகன்னிமாமுனிவன்வழுத்திவானரம்பையரைவர்
சந்தனந்திளைக்குமிளமுலைப்போகந்தரைமிசைநுகர்ந்துவாழ்ந்ததுவும். கூ

அங்கியங்கடவுளேத்திவிண்புலத்தாரவிப்பொறைமதுகைபெற்றதுவும்
பங்கமின்றிறைஞ்சிச்சவுனகமுனிவன்வீட்டினைத்தலைப்படும்பரிசு
மங்கருவெப்புவிழியவற்செகுத்தசுரகரம்வானவர்வழுத்திப்
புங்கவர்பெருமான்சுக்கிலம்பருகுவெப்புநோய்போக்கியவாறும். க0

புலிப்பதமுனிவன்கான்முளைபோற்றிப்பொங்குதீம்பாற்கடல்பெற்று
வலித்திறற்பார்த்தன்வலவனைமுடிமேன்மலரடிசூட்டியாண்டதுவும்[யிற்
கலித்தெழுமிமையோர்மலைமகண்மொழியாற்கரிசறத்தெளிந்தருட்குறி
சலிப்பறுமியக்கவடிவுகொண்டணைந்ததலைவனைத்தொழுதுய்ந்தவாறும்.

ஏதமில்பதிற்றுப்பதின்மரோடொரோன்பதின்மருமேத்தியவாறு
மாதர்மேற்றளியிற்கவுணியன்பாட்டான்மால்சிவனுருவுபெற்றதுவு
மாதரம்பூப்பவைங்கரப்புத்தேளனேகதங்காவதம்பாசிக்
கோதறவுலகமெண்ணியாங்குதவக்கொடுத்திடுமிறைமைபெற்றதுவும்.

மகதியாழ்முனியும்புத்தருக்கிறையும்வளம்பொழிற்றிருக்கயிலாயப்
பகவனைத்தொழுதுமுப்புரத்தவரைமருட்டியபாவமாற்றியது
நிகலுநர்ச்செகுப்பவிராகவன்வழுத்தியெறழ்வலியெய்தியவாறும்
புகழுறுங்கற்கிபோற்றுபுகடைநாட்கயுவரைப்புரட்டியவாறும். ௧௩

நறைமலர்ப்பனந்தார்முடியவன்வழுத்திநலம்பயில்வரம்பெறுமாறு [து
மறைகழன்மகவான்றொழுதுசெல்லுருவாயச்சுதன்சென்னியைத்துணி
நிறைபெருங்கீர்த்திகவர்ந்துமீட்டுய்யப்பூசனைநிகழ்த்தியவாறு
மறையவன்றலையைக்கொய்துவெம்பலிதேர்வயிரவன்பூசித்தவாறும். ௧௪

விண்டுவேர்விடுவச்சேனைபாவிவீரபத்திரனிறத்தணிந்த
வெண்டலைவிழுங்குமாழினைவிகடக்கூத்தினுலெய்தியவாறு
நின்டிருல்மேன்வியாற்றியதக்கன்வினைகெடவருச்சித்தவாறும்
விண்டவர்புரத்தினுய்ந்திடுமூவர்தொழுதுமெய்வரம்பெறுமாறும். ௧௫

பொன்பெயர்படைத்தோன்கிளைஞரோடேத்திப்பூசைசெய்தரசுபெற்றதுவுங்
கொன்பயில்விடையோனருள்வழிமாயோன்மடங்கலாயவனுயிர்குடித்துப்
பின்புகுந்தருக்கைச்சரபமாய்த்ததற்பின்பிழைகெடப்பூசித்தவாறும்
வன்புடையிரணியாக்கனையிறுத்தபன்றிபின்வழிபடுமியல்பும். ௧௬

அந்தகன்பரசிப்புவிமுழுதாண்டுகடைமுறையருள்பெறுமாறும்
வெந்திறல்வாணனிறுதியிற்பரவிவிறற்கணத்தலைமைபெற்றதுவுங்
கந்தமென்மலர்கொண்டடிதொழுதோணகாந்தனுங்கதிபெறுமாறு
மைந்துறவழுத்திச்சலந்தரன்கடைக்கால்வீட்டின்பமருவியவாறும். ௧௭

கேசவன்றிருமாற்பேற்றினிற்போற்றிக்கிளரொளியாழிபெற்றதுவும்
வேசறுபரசிராமனேத்தெடுத்துவெம்மழுப்படைபெறுமாறுந்
தேசுறப்பரவியிரேணுகையென்பாடெய்வதமாகியவாறு
மாசறும்யோகாசாரியர்தொழுதுவயங்குதம்பதம்பெறுமுறையும். ௧௮

சித்தசன்போற்றியுலகெலாங்காமஞ்செறித்திடுமிறைமைபூண்டதுவு
மத்தனுரேவலாற்றிலைணைந்தவகிலதீர்த்தங்களும்வணங்கிப்
பைத்தபாப்பல்குல்பாகனுர்தம்பாற்பற்பலவரங்கள்பெற்றதுவுந்
தத்துநீர்க்கிறைவனருச்சனையாற்றித்தங்குமிப்பதம்பெறுமாறும். ௧௯

காசிவாழ்விசுவநாதனுங்காஞ்சிப்பெட்பினுலணைந்துவைகியதும்
பூசனையுஞற்றிக்காற்றினன்கந்தவாகனுப்பொலிவுறுமாறு
மாசறுகோள்களொன்பதும்வழுத்தியெண்ணியவரம்பெறுமாறுந்
தேசுறுவாமதேவனன்முனிவன்றொழுதுவெம்பிறவிதீர்ந்ததுவும். ௨0

அகனுறப்பரசிமார்க்கண்டிமுதலோரிறப்பினைக்கடந்துமயன்மா
லிகலுறுசெருக்கின்வருவினைதணப்பவிலிங்கமங்கருச்சித்தவாறுஞ்
சகமெலாமிறுத்துமுக்கணெம்பெருமான்றங்குவீரட்டகாசத்தின்
முகினிறப்புத்தேள்பூசனையுஞற்றித்துகிர்நிறம்பெற்றிடுமுறையும். ௨௧

மாண்டகுகாமக்கண்ணியைவணங்கிமலர்மகள்சாபமாற்றியதும்
பாண்டவர்முதலோர்தொழுதுநல்வரங்கள்பரித்ததும்வணங்கியீசான
வாண்டகையாசைக்கிறைமையெய்தியதுமச்சுதன்மச்சமாய்ப்போற்றி
வேண்டலர்ச்செகுத்துவேதநூல்கொணர்ந்துவேதியர்தமக்களித்ததுவும்.

மீயுயர்குறளோனவுணனைச்சிறையிற்புகுத்துமீண்டிறைஞ்சியவாறு
மாயவன்பரவிக்கடல்விடந்தாக்கும்வெப்புநோய்மாறநின்றதுவு
நாயகியுருவிற்கவுசிகைதோன்றிநாதனைப்பூசித்தவாறுந்
தூயமாகாளப்பாப்பரசிறைஞ்சித்தொல்லைவீடுறப்பெறுமாறும். ௨௩

அண்ணலாராணைமறுத்தவெந்தீமையறுத்திடக்குமரகோட்டத்தி
னண்ணிவீற்றிருந்துசேயிலைநெடுவேலையன்பூசித்தவாறு
மண்ணெலாம்பரவுமார்க்கண்டமுனிபால்வஞ்சகங்கருதியமாயோன்
கண்ணுதற்பிரானையத்தலத்திறைஞ்சியவ்வினைகழுவியவாறும். ௨௪

சாத்தனூர்போற்றியுரிமைபெற்றதுவுமங்களைத்தையல்போற்றியதுந்
தீத்தொழிலரக்கர்ச்செகுத்துவந்திராமன்பணிந்ததுந்தேவர்கோன்வலவ
னேத்தியவாறுநாரணன்பரவிப்பாப்புருவிரித்ததுமயானக்
கூத்தனூர்முழுதுந்தழலிடையொடுக்கிப்பண்டனைக்கொலைசெய்தவாறும்.

ஓவியவுலகைத்தோற்றுவானைங்கோனுற்றமாமூலத்தின்முளைத்துத்
தாவறுசிறப்பினில்லிதைப்பிராட்டிதனைப்பயந்தாங்கவள்விழியின் [ந்தற்
மூவரைப்படைத்துச்செய்தொழில்வகுத்துச்செவியறிவுறுத்துமொய்கூ
றேவியுங்கடவுண்மூவரும்பரவச்சிறப்பொடுவீற்றிருந்ததுவும். ௨௬

திருவிளையாட்டான்மந்தரத்துமையாள்சிவபிரான்விழியிணைபுதைப்பக்
கருகிருட்பிழம்பினுலகெலாமூழ்கிக்கடப்பருங்கவலையுற்றதுவும்
வருவினைதணப்பப்பூசனைபுரிவான்மழவிடைச்செய்கையும்புகன்று
பெருநகர்க்காஞ்சிக்கிறையவன்விடுப்பப்பிராட்டியங்கெய்தியவாறும்.

மெய்த்தநல்லறங்கள்வளர்த்திடுமாறும்விண்டுவீச்சரமகத்தீ
மத்தளமாதவீச்சரம்வணங்கிப்போந்துமாந்தருவடிமுளைத்த
சத்தறிவின்பத்தனிமுதற்பொருளைத்தவத்தினாற்கண்டுகொண்டிறைஞ்சிப்
புத்தமிழ்தனையாள்விதியுளிவழாமைப்பூசனையுஞற்றியவாறும். ௨௮

கருணைமீப்பொங்குந்திருவிளையாட்டாலழைத்துறுங்கம்பைநீர்ப்பெருக்கைக்
குருமணிக்குழையாள்கண்டுளம்பதைத்துக்குழகனைத்தழுவியவாறுந்
திருமுலைச்சுவடும்வால்வளைத்தழும்புஞ்சிவபிரான்பொலிவுறப்பூண்டு
மருமலர்க்குழலாள்காணமுன்னின்றுவரம்பலவருளியவாறும். ௨௯

இமவரைப்பிராட்டிகவுரமாநிறம்பெற்றெம்பிரான்வதுவைவேட்டதுவு
முமையவள்காளவுரியினிலுயிர்த்தவொளியிழையவ்வுணரைமாட்டி
விமலநாயகன்றனருள்பெறுமாறுமேதகுவிம்மிதத்திறமு
மமைவரவொழுகுமொழுக்கமுமெழு[illegible]ண்ணியப்பேறும்.

இரண்டாங்காண்டவுட்டோகுதி.

மற்றுமோராற்றூற்கிளந்திடுந்திறத்தின்மால்வரைக்கயிலையினுமையாள்
கற்றையஞ்சடையார்விழியிணைபுதைத்துக்காஞ்சியிற்பூசனையாற்றும்
பெற்றியுமந்தர்வேதியுங்கரிகால்வளவர்கோன்பெருமையும்வினைநோய்
செற்றிடுந்தீர்த்தமுதலியமூன்றின்சிறப்புமீண்டியம்பிடப்படுமால். ௱க

பதிகப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௱௨௬.

# புராணவரலாற்றுப்படலம்.

## நைமிசாரணியச்சிறப்பு.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மிடல்கெழுதவத்தோர்வேள்விசெய்வினைக்குவேண்டியவேண்டியாங்குதவக்
கடவுளான்பயிலுங்காட்சியாலவியூண்கைக்கொளத்துதைந்தவானவராற்
றொடர்வுறுமோமப்புகைதழீஇச்சுரும்பருளர்தராப்பன்மலர்ப்பொழிலா
லடர்தருங்காமர்கற்பகவனமேயாயதுநைமிசாரணியம். க

தாதவிழ்கடுக்கைநறுந்தொடைமிலைச்சுந்தம்பிரானடியலதுணரா
மாதவரியற்றுமகவினைசிதைப்பவருகருந்தயித்தியரவர்தங்
காதும்வெஞ்சாபவலிக்குடைந்தோடுங்காட்சியேகடுக்குமம்மகத்தீ
மீதுயர்ந்தண்டச்சுவர்த்தலமுரிஞ்சவிசும்பெழூஉநறும்புகைப்படலை. உ

கருந்திரையளக்கரகடுடைத்தெழூஉந்துகளறுபிருள்பருகுவெங்கதிரோ
னிருந்தவர்வேள்விக்களத்தவிப்பாகமேற்பவந்தணுகுவோன்மான
மருந்தெனக்கிளைத்துவானுறநிவந்தவளம்பொழிற்கிளைகளைக்கரத்தாற்
றிருந்துறவொதுக்கிக்குனிந்துபுக்குலாவிச்சேணிடைப்போய்நிமிர்ந்துறுமால். ௩

சிறகர்வண்டிமிரும்வட்டவாய்க்கமலச்செழும்பொகுட்டரசுவீற்றிருக்கு
மறைமுதல்கிழவன்முனிவரர்வேண்டவளைத்தனன்விடுத்தபுன்னேமி
யிறவுறுதின்றுமாயிடையுறைவதெனக்கவின்காட்டிடுந்தேத்தி
யறைதரச்செறிந்துநறவழூஉமிறடுக்குமரும்பெறன்மதுவிருல்வலயம். ௪

விரும்பியவிடபந்தாங்குதோற்றத்தால்விளங்கெரியுருவினிற்பூத்த
வரும்பணிகொண்டகாட்சியாற்பெரியவரையவணிருந்தவராக
விருப்புவியுய்யக்கோடலால்யாருமேத்திடும்பெற்றியாலுலவாப்
பெரும்பெயர்க்கயிலைக்கடவுளேபோலும்பிறங்கொளிநைமிசக்கானம்.

திசைமுகனுந்தியுறவளைநேமிசேர்ந்திடுங்கொள்கையாலென்று
மசைவில்வானவர்க்குப்புரையவியமிழ்தமளித்தலாற்பூமணம்பெறலால்
வசைதபுகாட்சிக்கருநிறக்கருவிமழைமுகின்மேனிவந்தழகா
யிசைதலாற்சார்ங்கமேந்தியோனிகர்க்குமிணையிலாநைமிசக்காடு. ௬

குலவுநால்வாய்கண்மருவலாலகலங்கொண்டமுந்நூல்வயங்குதலாற்
சலமறவேதமொழிதலால்வனத்துத்தாமரையிருக்கைமேவுதலாற்
பலபொறிச்சுடிகைப்பையராச்சுமந்தபாரவைசூழ்புடவியேமுதலா
மலர்தலையுலகமுழுதுமீன்றளித்தவள்ளலாநைமிசப்புறவம். ௭

### முனிவர் கூட்டம்.

புகலுமிவ்வனத்தில்வசிட்டன்வேதாரணியன்புலத்தியன்றுருவாசன்
சுகன்வசுச்சிரவணுணிமாண்டவியன்சுனப்புச்சன்சமுவர்த்தன்மணிமே
சகன்சுனச்சேபனிரைக்குவன்சம்புதற்பரவாத்திரேயன்சௌ
நகமுனிபுலகனுசுவலாயனன்சமதக்கினிசங்கன். ௮

இரைவதன்குசுருவிந்தன்மாதேசனிலிகிதன்பராசரன்கற்கன்
கிருதுவக்கினிபல்பருப்பதனசிகேதனாதவசிகர்ந்த
னுருருவிச்சுவாமித்திரன்குணிபரத்துவாசனுந்தாலகன்வாசச்
சிரவன்சாண்டிலியன்காசிபன்வாமதேவன்றூற்பியனிரசனியே. ௯

கண்ணுவன்முதலாமெண்ணருமுனிவர்கழிபெருஞ்சீர்த்தியர்மாசு
மண்ணியானத்தார்பசுபதியடியார்வடிவெலாநீறுசண்ணித்த
புண்ணியர்மும்மைப்புண்டரநிரையர்ரக்கமாலிகையர்போர்விடையூ
ரண்ணல்வாழ்தலத்திற்பற்றினோரன்னனருச்சனையியற்றுமார்வத்தார்.

அங்கமுமறையுந்தெளிந்தவர்வேதமந்திரத்தவறிவினர்விமலர்
தங்குமஞ்செழுத்தேதெளிப்பவர்பொறியைத்தடுத்துயர்ந்தவர்மகமனைவி
செங்கனலோடுறைபவர்தமைப்போற்றிற்றுயிரனைத்தையுங்காணும்
பொங்குபேரருளினெல்லையரினையோர்பொலிவுறவாழுங்குடன்குழும்.

கறைமிடற்றிறையைக்கண்ணுறக்காணுங்காட்சியாங்கனிச்சியினெல்லான்
மறவினைக்கனிகன்மம்கியவுலகவாழ்வெஃறுநச்சுமாமார்க்கை
யிறுமுறைசான்பதிமெய்ஞ்ஞானத்துணிந்தாரிதுபெறுமுபாயமற்றெவனென்
றறிவினினெடும்போதாய்வுழியவருளாருந்ததிகொழுநனிதமையும். ௧௨

### தவம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தவமேமேலாநெறியாகுந்தவமேசிவனார்தமைக்காட்டுந்
தவமேதுறக்கமடைவிக்குந்தவமேநரகனைத்தேவாக்குந்
தவமேவலாரிதிசைக்கிறைவர்சார்ங்கனயனுமாக்குவிக்குந்
தவமேகிடைப்பிற்கிடையாததுண்டோவென்றுசாற்றினனும். ௧௩

### தானம்.

அறமேமறுங்கண்முழுதழிக்குமறமேகடவுளுலகேற்று
மறமேசிவனுக்கொருவடிவமாகுஞ்சிவனைவழிபடுவோர்க்
கறமேயெல்லாப்பெரும்பயனுமளிக்குமியார்க்குமெய்விட்டு
மறமேயச்சந்தவிர்ப்பதெனவறைந்தான்சாதாதபமுனிவன். ௧௪

### ஈகை.

கொடையேயெவர்க்குமெய்ப்பேறுங்கொடுக்குநெறியிற்பிறழாத
கொடையேயாருந்தன்வழியினொழுகச்செய்யுங்குறைதீர்ந்த
கொடையேபகையையுறவாக்குங்குலவும்பூதமனைத்தினையுங்
கொடையேபுரக்குமென்றுள்ளங்கொள்ளப்புகன்றான்கவுதமனே. ௧௫

### வாய்மை.

மெய்யேசிறந்தபெருநலமாமெய்யேயெவையுநிலைபெறுத்து
மெய்யாலழல்கால்கதிர்பிறவுந்தத்தந்தொழிலின்விலகாவா
மெய்யேயெவைக்குமிருப்பிடமாமெய்யேமெய்யேசிவமாகு
மெய்யேபிரமபதமுமெனப்புகன்றான்வினைதீர்காசிபனே. ௧௬

மகம்.

எச்சமொன்றேயிருமையினுமேலாமிமையோர்க்குவப்பாவ
தெச்சமொன்றேமகத்திறையாமெம்மான்விழையப்படுவதுவு
மெச்சமொன்றேநனிசாலச்சிறந்தபொருளுமிருங்கரும
வெச்சநிகர்வேறில்லையெனப்பரத்துவாசனியம்பினனால். கஎ

மகவு.

மகவேமேலாங்கதியாக்குமகவானுலகந்தனைவெல்லு
மகவின்மகவான்முடிவின்மையெய்துமகவின்மகவளித்த
மகவான்மேலைப்பதமுறுந்தென்புலத்தார்கடனைமாற்றுவது
மகவானன்றியில்லையெனவகுத்தான்றெரித்துக்கண்ணுவனே. கஅ

துறவு.

துறவேயறங்களெவற்றினுக்கும்பெரிதாம்விடையூர்தோன்றலுக்குந்
துறவேயுவகைவரச்செய்யுந்துறவேயயன்மாலுலகளிக்குந்
துறவேயீசனிடத்திருத்துமெவருமேலாச்சொல்லுவதுந்
துறவேயாமென்றெழுந்துநின்றுசொற்றான்சைவத்துருவாசன். க௯

சூதபௌராணிகர்வரவு.

வேறு.

இன்னவாறுபன்முனிவருமியம்பினர்பிணங்குழியிவர்ட்டு
நன்னர்வான்றவங்கொணர்ந்தெனவாயிடைநணுகினன்விடையூரு
மென்னையாளுடையிறையடிதைவருமிடையறாத்தியானத்தான்
பன்னுமெய்த்தவப்பராசரன்பயந்தருள்புண்ணவன்மாணாக்கன். உ0

விளங்குநீற்றொளிகதிர்செயவீங்கிருளக்காலிகைவீசும்
வளங்கனிந்தபொன்மேனியான்புண்ணியம்படிவெடுத்தெனவந்தான்
றுளங்குறுதுயர்புராணமுற்றளந்தறிதொல்லையோனமரர்க்காக்
களங்கறுத்தவனுண்மைதேர்ந்துயிர்க்கெலாங்கருணைகூர்ந்தருள்சூதன்.

முனிவர்வினா.

புக்கசூதனைமுனிவரர்யாவரும்பொங்கியபெருங்காதன்
மிக்கவோகையினெதிர்கொடுபூசனைவிதியுளிவழாதாற்றித்
தக்கவாதனத்திருத்தினர்வினவுவார்தறுகணம்புலவாழ்க்கை
யொக்கநீப்பயாமுன்னரேயருந்தவமுஞற்றினமதனாலே. உஉ

வென்றிவெள்விடைப்பிரானடிகாண்பதேவீடுபேற்றினுக்கேது
வென்றுதேறினங்காண்பதற்குபாயமற்றதுவெனத்தெளிகில்லே
மொன்றலாதனவேறுவேறுரைத்தனமுயங்கினம்பிணக்குற்றே
மன்றகண்டிலேந்துணிவுமெய்யுணர்விலான்மலக்குறும்பறச்செற்றோய்.

எங்கள்பாக்கியப்பயனெனநீயிவணெய்திடப்பெற்றேம்யாங்
கொங்குயிர்த்ததார்த்துளவனேவியாதனக்குலமுனியருளாலே
யங்கண்மூவறுபுராணமுமுணர்ந்தனையறமுதல்பொருணான்கிற்
பொங்குசீர்த்தியோய்நீயறியாததுபுவனமூன்றினுமில்லை. உச

ஆதலாற்பலநெறியினுந்துணிந்தவாறரன்றிருவடிகாண்டற்
கேதுவெங்களுக்கருளுதிவறிதுநீயேகலையுயர்வானிற்
பாதவம்பொரப்பெரியவர்காட்சியும்பயன்படாதொழியாதாற்
சூதமாதவவென்றலுமகங்களிதுளும்பியோதுவன்சூதன். உரு

### சூதபௌராணிகர்விடை.

மொழியுமிப்பொருண்மூவறுபுராணத்துட்காந்தமூவிருகூற்றிற்
கழிவில்சீர்ச்சனற்குமாரசங்கிதையினிற்காளிகாகண்டத்திற்
றழுவுதீர்த்தமான்மியத்ததுநந்திபாற்சனற்குமாரன்கேட்டங்
கழிவிலாவருள்வியாதனுக்குரைத்திடவவனெனக்கருள்செய்தான். ௨௬

நீயிர்பேரறிவாளராய்விரதநன்னெறியினிற்பிறழாமே
தூயமெய்த்தவவலியினாற்பழமலத்துகளறுத்துமையோர்பா
ரையனாருள்பெற்றுளீராதலினன்றுமிப்பொருளுங்கட்
கேயவோதுவனொருங்கியமன்த்தொடுங்கேண்மின்களெனவோடும். ௨௭

அண்டர்நாயகனடம்புரிநாயகனடியவருளக்கோயில்
கொண்டநாயகன்றிருவடித்தரிசனங்கூடுதற்குபாயஞ்சீர்
மண்டுதீர்த்தமான்மியத்துநீபெற்றதெவ்வாறெனக்கடாவுற்ற
பண்டைமெய்த்தவர்க்கிருண்மையம்புலப்படப்பகராலுற்றனன்சூதன். ௨௮

புராணவரலாற்றுப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௬௦௭.

# சனற்குமாரப்படலம்.

மகாமேருச்சிறப்பு.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தொடுகடல்வரைப்பின்மன்பதைத்தொகைகள்சோழன்மீனவனெனவீண்டிப்
படர்பொலங்குழைவகள்கவர்ந்துருவண்ணம்பரிந்துகாப்பவுமொனவசுரார்
கடவுளரியக்கர்சித்தர்கந்தருவர்கின்னரர்சாரணர்பிறரு
முடனுறநெருங்கிப்போற்றமூவுலகுமுருவிமேனிவந்ததுமேரு. ௧

சேர்ந்தனமுழுதுநன்னிறமாக்குஞ்செய்கையாற்றனக்கினமாகிச்
சார்ந்தமாணிக்கவண்ணரேகம்பர்தமக்கலால்வணங்கிடாதாகி
வார்ந்தபல்கோளுநாள்களுநாளும்வலம்வரவிராப்பகல்விளக்கி
நேர்ந்தபேராசையெட்டையும்பகுத்துநின்றதத்தமனியக்குன்றம். ௨

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நயக்குமற்றிதனொளிபாங்கிமையோர்நாடுபொன்னிறம்படைத்ததென்றெவரும்
வியத்தகுங்கிரிமணிபலவரன்றிமீதுநின்றிழிமுழங்குவெள்ளருவி
வயக்கமாண்டமுப்புரிசையன்றிறத்தவள்ளல்பூட்டுவிட்டிருத்தியசிலையி [ம்.
னியக்கமேவுபல்பொறியபன்னகநாணிரைந்துகொண்டொளிர்தொடக்கமேயொக்கு

மலையெவற்றையுஞ்சிறகரிவலாரிவயங்கெடப்பொருந்தழித்தவன்வணக்குஞ்
சிலையினைப்பறித்தூங்குழைத்தென்னத்திவலையிந்திரதிருவிலைக்காட்டு
மலைதிரைப்புனலருவிசூழ்மேருவம்பொன்மாற்றினிலதிகமாயதுதா
னிலைபெறத்தவமெண்ணிலூர்குழ்இச்செய்நிறைதவக்கனல்கதுவலிற்போலும்.

சததிருங்கமலைவளம்.

தடாதபேரொளிக்கபனியம்பழுத்ததன்னருச்சுனைக்குடியங்குவாட்டு
வடாதுமாமலைக்காந்தியின்பிறக்கமடங்கிடாதுபல்சுடர்விரித்தெழுந்த
கெடாததோற்றமேயுறழமற்றதன்மேற்கினர்சுரும்பினம்பெடையொடுதழுவி
விடாதுகண்படுபொழிற்சதசிருங்கவெற்பெனத்திசைபோயதொன்றுளதால்.

குரவுமாதவியுழிஞைமந்தாரங்குருந்துபாடலம்பாலைமுந்திரிகை
மருதுபோதிபிடாரிஞெமையோமைவஞ்சிகாஞ்சிகுங்குமநமையொடுவா
ணரைதளாவுதிசெருந்திசேவெகினமகில்பலாசுசந்தில்லமாவில்லம்
வரைதமாலமாதளைகணியதிங்கம்வகுளமின்னனநெருங்கினவோங்கும்.

அன்றிஞர்புரமழலெழநகைத்தவண்ணல்சேவடிக்கன்பருவியல்பிற்
றன்றமெய்த்தவயோகியர்க்கெல்லாந்தூயநற்றவச்சாலையுமாகித்
தென்றலார்தரப்பூமணங்கஞலத்தெளிபுனற்சுனையளவிலகவின்று
பொன்றிடாக்கடவுளர்முதலோர்க்குப்போகபூமியுமாயதப்பொருப்பு.

அங்கணவாழ்தருமயன்மனைக்கிழத்தியங்கிராப்பணின்றருந்தவஞ்செயல்போற்
கொங்குலாந்துவர்ப்பங்கயத்திரைதேர்குறிப்பிஞேதிமமசைவறவிருக்கும்
பொங்குவெண்டிரைத்தீர்த்தத்தின்மாடேபுரங்கடந்தவர்வரமவட்குதவித்
தங்குகாட்சியினறுமலர்பொதுளித்ததைகடுக்கைபொன்சொரிவனவுடைத்தால்.

ரீதுசந்திரசூரியர்கிரணம்விரவலாமையிஞெருபொழுதலர்ந்தோர்
போதுகூம்புமச்செய்கையாங்கின்றிப்புரிமுறைக்குடைந்தென்றமோரியல்பிற்
கோதில்பன்மணிக்கதிரொளிவருடக்குளிர்ந்தலர்ந்திரண்டவத்தையுங்கடந்து
மாதர்வெண்பிறைக்கண்ணியரடிசேர்மாந்தரொத்துள்வளஞ்சுனைமலர்கள்.

வென்றவைம்புலவார்நகையவ்வடிவின்விளங்குபூதியும்விரைகமழ்கடாத்த
குன்றுபோலுயர்களிற்றுநீள்கோட்டுக்குலவுமுத்தமும்வேயுகுமணியுந்
துன்றிவானிலாக்கற்றைகால்வெண்மைதூயபொன்மையைவிழுங்கியதேயோ
வன்றியவ்வரைப்பொன்மையேவெண்மைதனைவிழுங்கியதோவதுவறியேம்.

இனையசீர்பெறுசதசிருங்கத்தினெண்ணிலாப்பெருவளத்தனவாகி
நனைமலர்ப்பொழில்சண்பகஞ்சாளநாரந்தந்தெங்குகோங்கரம்பைகளுடுத்து
வனசநீள்சுனைமல்கியபிரமவனமொன்றுள்ளதுமற்றதஞ்பபட்
டனைநிகர்ப்பதுநான்முகக்கிழவன்றனமாயதுபிரமமாநகரம். கங

சனற்குமாரமுனிவர்யோகசெய்திருத்தல்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொற்பமரினையநகர்க்கொருபாங்கர்ப்பொங்கொளிமடங்கலேறென்று
பற்பலமடங்கல்சூழவீற்றிருக்கும்பரிசெனத்தவர்நீழ்றெளியி
னற்புதக்கோலத்தறிஞர்சூழ்ந்தேத்தவருட்சனற்குமாரமாமுனிவ [னாள்.
னெற்பணிப்பெருமான்சரணுளத்திருத்தியோகுசெய்திருக்குநாளொரு

வைகறையெழுந்துகங்கைநீராடிவானவர்முனிவர்தென்புலத்தார்
செய்கடனுவப்பத்தெண்புனலிறைத்துநியமசமுத்தியமுமாற்றிப்
பொய்களைவிரசையங்கியின்விதியாற்பூத்தநீறங்கையினெடுத்து
மைகரந்தீர்ந்தவன்பொடுமியாசநடைபெறுதியானமுன்னுக. கரு

அடைவுறுபஞ்சப்பிரமமந்திரத்தாலங்கியென்றற்றொடக்கத்தான்
முடிவில்சாபாலஙுனுக்களேழாற்றுன்மூவிரண்டதர்வமந்திரத்தால்
வடிவுறுமிடக்கைவைத்துமுன்மும்முக்கான்மந்திரித்தறலிஞற்குழைத்துக்
கடிகெழுசென்னிமுதலடிகாறும்பிரமமோரைந்தையுங்கமுறி. கச

நிறையவுத்தூளஞ்செய்துபின்றிரியம்பகங்களானிகழ்த்துமஞ்செழுத்தா
லறவிஞசமித்துப்பின்னருந்திரியாயுடந்திரியம்பகமனுவான்
முறையினஞ்செழுத்தாற்புண்டரமூன்றுமுச்சுடர்முக்குணமும்மை
மறைகண்மூவுலகுமுங்கிறமுத்தீவடிவெனச்சிந்தையிற்கண்டு. கரு

ஐந்துமூவிடத்துமழகுறவணிந்தாங்கருக்கற்குச்சந்திநீருதவி
யிந்திரதிசையைநோக்குபுமோனமெய்திநல்லாதனத்தும்பர்ப்
பந்தமில்சுகஞ்சேரிருக்கையனாகிப்பஞ்சபூதத்தையொன்றொன்றி
னுந்துறவொடுக்கியாவியைப்பிரமரந்திரத்தொடுக்கியபின்னர். கசு

பாதகக்குழிசிப்புலையுடற்றொடக்கைப்பவனபீசத்தினாலுணக்கிப்
போதரவன்னிபீசத்தால்வேவப்பொடித்ததுவாரிபீசத்தாற்
சீதமானனைத்துத்தரணிபீசத்தாற்றிரட்டிவேறுறுப்பெலாம்பகுத்து
மேதகச்சத்திபீசத்தானிறைத்துமேயபின்விதியுளியுயிரை. கஎ

ஆசுதீருடம்பின்முன்புபோலிருத்தியங்கணாதாரபங்கயத்துத்
தேசுறும்வன்னரூபியாய்நிறைந்ததேவியைமுறைவழாதமைத்துப்
பேசிருபத்தோராயிரத்தறுநூறுயிர்ப்பினைப்பிரித்தசபையினை
மாசறுமானைமுகப்பிரான்முதலோர்மகிழ்வுறும்படியவர்க்குதவி. கஅ

ஆவியாமிலிங்கத்தந்தரியாகவருச்சனைவிதியுளியாற்றி
மேவியபின்னர்ப்புறத்தினுஞ்சென்னிமுகமுதல்விளம்புறுப்பெல்லாந்
தேவியையைம்பானெழுத்துருவானசெல்வியைநலம்வரவமைத்துப்
பாவுறும்பிராணாயமங்கண்முறையிற்செய்துபின்பரிதிகாணளவும். ககூ

அருமறைக்காயத்திரிப்பெருமனுவையாயிரத்தெட்டுருக்கணித்துக்
கருதியயோகசித்தியின்பொருட்டுங்கணேசனைமுன்புபூசித்துப்
பரிதிமண்டிலத்துந்தண்டலந்தனினும்பகர்குருமிலிங்கமூர்த்தியினு
மருவுமங்குட்டம்பியாஞ்சிவனைவான்முறையருச்சனைபுரிந்து. உ0

யோகினைக்கூடித்தன்னுடையிதயத்திசமென்றுரைக்குமெட்டிதழுஞ்
சேகறும்வயிராக்கியமெனும்பொருட்டுஞ்செப்புவாமாதிகேசரமு
மாகியகமலமாவியாயாமத்தலர்தரக்கண்டுமற்றதன்மே
லேகன்மும்மூர்த்தியாகிமுக்குணங்கட்கிறைவன்மும்மண்டிலவீசன்.

முக்கணன்புட்டிவருத்தனனீலப்பொன்மயன்முதிர்கறைமிடற்றன்
றக்கவீசானன்வன்னிரேதாநற்சத்தியனருவினனுருவன்
புக்கசீர்ப்புருடன்விச்சுவருபன்புருட்டுதன்சிவன்புருகூதன்
ணைக்குமெய்ச்சத்துப்பராபரம்பரமான்மாமகத்துயர்பரப்பிரமம். உஉ

என்றெடுத்துரைக்கும்பெயர்களின்பொருளாயியம்பரும்பரவெளிநாப்ப
ணின்றபேரொளியின்பிழம்பினையினையசத்தியினோடுநேர்நோக்கி [ந்து
யொன்றுதன்னுயிரையப்பெரும்பொருளோடொன்றுவித்திருபகுப்பிற
மன்றயோகத்தினசைவறவிருந்தான்மறையவனீன்றருண்மதலை. உங

சிவபெருமான்திருவுலா.

ஆங்கவனவ்வாறரியயோகத்தினனந்தபரவசனாகி
யோங்குபேரறிவின்விழித்தனனுறங்குமேல்வையினும்பர்தம்பெருமான்
பாங்குயிற்கிளவிமலைமகளோடுமலர்தலையுலகுகாத்தளிப்பான்
வீங்கியகருணையூற்றெழத்தூமவெள்விடையூர்திமேல்கொண்டு. உச

உரகர்கந்தருவரிராக்கதர்சித்தர்யோகிகளாசைகாப்பாளர்
நிரைமணிமோலிபாதுகைவருடநிகழுமாகாவுடனூகூ
விரிபுகழேனைவீணைவல்லவரும்விருதெடுத்தோதியாழ்தடவ
விருவிசும்பகத்தினினிதெழுந்தருளியுலவினனென்னையாளுடையான்.

அதுசனற்குமாரன்யோகினில்வைத்தகருத்தினலறிந்திலனுகிக் [டு
கதுமெனவிருக்கையெழாமைகண்டெம்மான்கருணைகூர்ந்துமையவளோ
விதுவணிசடிலத்தெம்மையேயுளத்தின்விழைதரவிருத்திமற்றெம்பாற்
பொதுவறவொருக்குமனத்தினனென்னுப்புரிவொடுங்கோயில்புக்கனனுல்.

சினறீதுமாரமுனிவர்சாபமேற்றல்.

நந்தியெம்பெருமானுக்கினன்வெகுண்டுநலமிலாவொட்டகமேபோ
லந்திலெம்பிரானையிகழ்ந்திருந்ததனலவ்வுருவாசெனச்சபிப்பச்
சிந்தைகூர்முனியுமொட்டகமாகிச்செழுநிலத்துழிதருகாலை
முந்தைநான்றியற்றுநல்வினைப்பயனுன்முன்னினன்கச்சிமாநகரம். உஎ

பிரமன்கச்சபேசரைப்போற்றல்.

ஆயிடைக்கச்சபேசனுமிறைவனமர்ந்தருள்கோயிலின்மாடே
காயுமைம்பொறியினுலகெலாம்படைக்குங்கருத்தினன்மலரணைப்புத்தே
ளேயமாதவத்தினினிதுவீற்றிருக்குஞ்சூழலினணுகுத்லோடுந்
தீயபாவத்தினொட்டகவடிவாஞ்சிறுவனைக்கண்டனன்றுதை. உஅ

பாவடிநெடுங்காற்றிரையெழுதோல்வாய்ப்பழியுடலொளிந்துநீள்கழுத்தி
யாவருமிழிக்குமொட்டகயாக்கையிளவலைநோக்கினின்றந்தோ [ன்
சேவுயர்கொடியானடித்தொழும்பாற்றுந்திருவருட்குரியனுமிவனுக்
காவவெஞ்செய்கோவெம்மகற்கிதுவந்தடுத்ததெவ்வாறெனவெண்ணி.

யோகினைக்கூடிமுன்னிகழ்வனைத்துமுணர்ந்தனனவ்வினைதவிர்ப்பா
னுகமமுறையாற்கச்சபேசன்பாலடைந்துபூசனைசெய்தேத்தெடுப்பான்
மாகர்போற்றிசைக்குமிளம்பிறைமோலிவள்ளலேயுலகளித்தழிக்கு
மேகனேயாமையுருவொழித்தரியையாண்டநின்னிணையடிபோற்றி. ரு0

காசிகேதாரம்புட்கரங்குருக்கேத்திரங்கடினைமிசங்களினு
மோசைகொள்காஞ்சியதிகமென்றுரைப்பதுரைப்பிரமாணமொன்றன்று
லீசனேநீயுமுமையுமேயல்லாலிந்நகர்படைத்தவரில்லை
தேசுறயானேகண்ணுறக்கண்டுதெளிந்ததாமெந்தவூழியினும். ருக

புரியுநின்னருளாலுயர்ந்தவரனேகர்புரவுபூண்டெட்டுருவெடுத்தோய்
வரிவிழியுமையாண்மணந்தபேரின்பவடிவமேயிடும்பைநோயறுக்குங்
கருணைவாரிதியேயிரங்கிடாயெமக்குக்களைகணீயன்றிவேறிலையென்
றிருகணீர்சொரியநெக்குநெக்குருகியேத்தினனுத்தமூப்பேற. ருஉ

கச்சபேசர்காட்சி.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திசைமாமுகன்வாழ்த்தொலியஞ்செவியிற்சென்றேறலுமாரருணுந்துதலால்
மிசைவானவர்பூதகணம்புடையின்மிடையப்பெருமானெதிர்நின்றருளி
வசைதீர்தரவேட்டவரந்தருகேமைந்தாவுரைசெய்கெனவாய்மலரா
விசைபாடினனுழைகதுளும்பிடநின்றிதுகூறுதலுற்றனன்வேதியனே.

நின்றொண்டுவழாதவனென்புதல்வனீடுந்தவமுற்றுசனற்குமரன்
முன்றிண்சதகோட்டிடைநின்றிருதாண்முன்னிச்சிவயோகுமுயன்றுதவத்
தொன்றும்பொழுதாயிடைநீவருதலுணர்ந்தானலனிட்டைகருத்துறலா
லன்றங்கருணந்திசபித்ததனுலமரொட்டகவாக்கையனுயினனே. ருச

**பிரமன்நந்திதேவனைவேண்டல்.**

இன்றேயிதுதீர்த்தருளென்னவிரந்தேத்தித்தொழுவெந்தையுமெம்மடியார்
நன்றேகொடுசெய்தனையாவையவைநம்மால்விலகாவதனான்மறையோய்
பொன்றுதிதுநந்திதவிர்ப்பனெனப்புரிவுற்றருள்செய்துமறைந்தனனா
லன்றேமலராளிதவத்திறனலங்குற்றருணந்தியைவேண்டுதலும். ௩௫

**நந்திதேவர்கருணைகூர்தல்.**

நந்திப்பெருமானுமகிழ்ந்தலரோய்நங்கச்சபவீசனெதிர்ப்படலா
லந்தப்பொழுதுன்புதல்வன்பெறுசாபந்தீர்ந்ததுவாயினுமன்பர்கள்பாற்
பந்தித்தபெருங்கருணைகரனென்பதுநாடினனெம்மிறைநின்புதல்வன்
கந்தப்பொழில்சூழ்வடமேருவினங்கண்ணெய்துகவிவ்வுருநீங்குமரோ.

நவைதீர்ந்தபினெம்மருளாலிவனம்மாணுக்கனுமாகிநயந்துதவுஞ்
சிவதீக்கையையுற்றுவிரிந்தகலைத்திரள்யாவுமுழீஇச்சிவஞானமுணர்ந்
தவமாற்றுவனென்றருள்செய்தகலவல்லோனவண்மைந்தனையன்புறுத
னிவர்வுற்றகணத்தரொடும்புகுவித்திப்பாலருமாதவமுற்றியபின். ௩௭

உயர்கச்சியிலோங்குபலாசடியினுறைகச்சபவீசனருட்கருணை [ற்
பயில்வுற்றுமுறைப்படியெவ்வுலகும்பண்டேயெனநன்குபடைத்தனன்ம
றியல்பின்வடமேருவினந்திபிரானிருக்குநிலையத்தின்மலர்த்தலைவா [ல்.
முயன்மைந்தனொடுஞ்செல்கணத்தவரப்பெருமானடியேத்தியியம்புவரா

**நந்திதேவருக்குசனற்குமாரமுனிவர்மாணுக்கராதல்.**

வேதாவெமையேயினனீயிர்கள்போய்மேருப்புடைநந்திமுதல்குரவன்
பாதாம்புயமேத்தியிம்மைந்தனவன்மாணுக்கனுமாம்படிசேர்த்தியிவட்
போதீரெனவன்றருள்பெற்றவர்தாம்போகத்தனருட்கணிறெட்டகமாய்
கோதாருருநீத்தொளிபெற்றவனைமாணுக்கனெனும்படிகொண்டனனே.

*அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.*

அன்னோனவன்பாற்றீக்கையுமிவழிபாடாற்றிமுழுதுணர்ந்தான்
முன்னர்ப்புராணநியாயநூல்கருமமுதனூறருமநூன்
மன்னுசிக்கையேழ்சந்தைவழங்குமொன்பான்வியாகரணம்
பன்னுமெண்ணூன்முககந்தம்பலவுமுறையினோதினனால். ௪0

ஏழுகற்பசூத்திரங்களிருக்குமுதலாநான்மறைக
ளாயுள்வேதம்வில்வேதமமல்காந்தருவமருத்தநூல்
பாயபலவும்விதிமுறையாற்பயின்றுநந்திப்பிரானருள்சேர்
தூயமுனிவன்பின்னருமொன்றிரந்துவேண்டித்தொழுதுரைப்பான். ௪௧

**சனற்குமாரமுனிவர்வேண்டுகோள்.**

**வேறு.**

உன்புடைக்கல்வியெல்லாமுணர்ந்தனனவைகளொடங்கு
மின்புடைச்சிவப்பேறென்றேமுத்தியென்றியம்புமெந்தாய்
புன்புலையுடம்புநீங்கிப்பரவெளிப்பொருளைக்கூடு
மன்புடைப்பசுவேயன்றோசிவனியல்பதனைச்சேரும். ௪௨

மானிடன்விசும்பைத்தோல்போற்சுருட்டுதல்வல்லோனாயி
னீனமில்சிவனைக்காணுதிடும்பைதீர்வீடுமெய்த்து
மானமார்சுருதிகூறும்வழக்கினையாதலாலே
யானமரிறையைக்காணுமுபாயமேயறிதல்வேண்டும். ௪௩

ஆங்கதுபலவாற்றானுமருளினையவற்றினுள்ளுந்
தீங்கறவெளிதிற்கூடுமுபாயமுஞ்செப்புகென்று
வோங்குசீர்ச்சனற்குமாரனுரைத்தலுஞ்செவிமடுத்து
வீங்குபேருவகைபூப்பவிளம்புவானந்தியெங்கோன். ௪௪

நந்திதேவரனுக்கிரகம்.

அருள்பெறுசனற்குமாரனாறுமுகன்கூறென்றன்னைச்
சுருதியிற்களந்தவாற்றாலறிவினிற்றாயைமுற்று
மிருளறவுணர்ந்தாய்நீயேயிருந்தவத்தலைவன்கேட்டி
மருளினீர்ந்துலகமுய்யவினையதுவகுத்துச்சொல்வாம். ௪௫

அந்தணரரசர்நாய்கரிருபிறப்பாளர்வேத
மந்திரக்குரியோர்நான்குவகைநிலையிவர்கட்கென்ப
நிந்தையில்பிரமசாரிநிலையுயர்மனையின்வாழ்க்கை
சுந்தரவனத்தின்வாழ்க்கைதுறவறமந்நான்காமால். ௪௬

கருநிலைக்கெட்டாமாயுள்பதினொன்றுகருதிராறும்
வருடத்தின்மறையோராதிமூவர்க்குமறையினாசான்
றொருளுபநயனஞ்செய்வன்முனிவர்தங்கடன்றீர்ந்தற்குப்
பொருவிலாமறைகளங்கமோதுதற்பொருட்டுமன்றே. ௪௭

ஆங்கதன்பின்னர்க்காமமறம்பொருட்பேற்றினோடு
மோங்குசீர்ப்பிதிரர்வானோர்கடன்களினொழிவும்வேண்டி
மாங்குயிற்கிளவிமென்றோண்மனையையமணப்பர்பின்னர்த்
தாங்கரும்வனத்துச்செல்வர்தவமிகக்கிடைத்தல்வேண்டி. ௪௮

கடனெலாம்விண்டபின்புகருதருந்துறவிற்செல்வர்
நடலைகூருலகவாழ்வைவெறுத்துநல்லறிவுதூய்தா
யிடனுடைத்துறவிற்சென்றோரிருவகைநியாயத்தோடு
மடனறான்னூல்பற்றிமறைமுடிவுணர்தல்வேண்டும். ௪௯

இருவகைநியாயம்பூர்வமுத்தரமெனப்பேரெய்து
மொருவகைசிவபூசைக்காமொருவகைசிவப்பேற்றிற்காஞ்
சுருதியேயிலிங்கஞ்சொற்சேர்வைபடுத்துக்கோட்டோசொல்லின்
வரும்பயரிவற்றின்மென்மைவன்மையென்றிவற்றையாய்தல். ௫௦

கட்படுபூசைபூர்வகருமநூனியாயத்தாகும்
மெத்தாக்கமீறப்பிராசயபூர்வதைபலமேசொல்லு
னெடுத்துரையருத்தவாதமிவைசிவப்பேறுகூறற்
கடுத்தவுத்தரநூலுண்மைதுணிவதற்கிலிங்கமாமால். ௫௧

இரவெரியாடுந்தேவையிம்முறைதுணிந்தஞானி
பிரணவமனுவாற்போற்றிப்பேதுறுதுடல்சாங்காறும்
பரவிடினவற்குமுக்கட்பரன்வெளிப்படுவன்பட்டான்
மருவுபேரின்பந்துய்த்துவியலனில்வாழலாமே. ௫௨

பின்னவன்மாயவாழ்விற்பிறந்திறான்சிவமேசேர்வன்
முன்னருஞ்சிவப்பேற்றிற்குமுறைவருமுபாயமீதா
மிந்நெறிசிறியோர்யார்க்குமெளியதன்றெளிதாய்நேரா
மந்நெறிமக்கணெம்மான்பதிகளினமர்தலாகும். ௫௩

ஆயிடைச்சாக்காடெய்தின்விலங்குநாயடிவோன்புன்று
மேயபுன்மாக்களோடும்விடுபேறடைவதுண்மை
நீயிதற்கையங்கொள்ளேலென்றலுநெடிதுவாழ்ந்து
தூயசீர்நந்திபாதந்தொழுதெதிர்குமாரன்கூறும். ௫௪

சீர்த்தலவாழ்க்கையொன்றேசெவ்வழியியலென்றுரையைய
பார்த்தலத்திறைவன்மேவும்பதிகளெண்ணிலவாமிக்க
கீர்த்திசாலவற்றுள்மேலாய்க்கிளர்சிவப்பேற்றின்முத்தி
யார்த்தியின்றுதவுந்தானம்யாதுநீயருளுகென்றான். ௫௫

என்றலுநந்திப்புத்தேள்கணப்பொருடெண்ணிமுன்னாள்
வன்றிறல்விடையோன்றேவிக்குரைத்ததுமனத்துட்கொண்டா
னென்றவர்ப்பணிந்துமைந்தாவரனுமைக்கியம்புமாற்ற
நன்றுநீகேட்டியென்னவரன்முறைநவிலலுற்றான். ௫௬

சனற்குமாரப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௪௧௯.

# தலவிசேடப்படலம்.

சிவபெருமான்றிருவோலக்கச்சிறப்பு.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இமைத்தபன்மணிகள்காந்திவிட்டெறிக்குமரிசுடர்ப்பேரொளிப்பரப்பு
மழைக்கணாத்திறையைத்தொழூப்புகுந்திறல்சால்வானவர்நோக்கலாற்றது
விழித்துணையிமைப்பச்செய்தொறுமவரவ்விளைவறியாமெதமக்கென்னோ
பழுத்ததோமுடிவுகாலமென்றழுங்கும்படியதோர்கனகமண்டபத்தில். ௧

எறுழ்வலித்திரடோளிரணியன்மருமத்திரத்தநீர்வாய்மடுத்தெழுந்த
வெறிமயக்கறுத்தபெருவலிநோக்கிவிலக்குறுமும்மலமயக்குந்
தெறுமெனநரமாமடங்கலின்முழுதுமடங்கலாய்த்திருவடிதாங்கி [ன்
யுறுவதுகடுக்குமடங்கலேற்றெருத்தத்தொளியெறிமணிப்பொலந்தவிசி

எரியவிர்ந்தனையதுவர்மணிச்சடிலத்தெறிதிரைக்கங்கையூடலைந்து
பருவருங்கேண்மைச்சிறுபிறைக்கிரங்கிப்பற்றித்தனிருக்கையிற்கொடுபோய்த்
தெருமராதளிப்பான்முழுமதியனுக்குச்செவ்விபார்த்துறைவதுமானும்
விரிகதிர்த்தரளத்தொங்கல்சூழ்வட்டவெண்குடைமீமிசைநிழற்ற. ௩

தொல்லைநாட்புகழ்களங்கனுநெருங்கத்துன்றிவெற்றிடங்களின்மையிரு
ளல்லுறழ்மிடற்றுப்பிரானிடத்துயிர்த்தவற்றைநாட்கீர்த்திகளிருபாற்
செல்லிடந்துருவிக்கொட்பபோலரிமான்செழுந்தவிசொடுமணிக்குடைக்கீ
ழெல்லையுமேலும்வெள்ளொளிபரப்புமிடையினிற்சாமரையிரட்ட. ௪

வேட்டவேட்டாங்குவரங்கள்பெற்றேகும்விண்ணவர்துகொடுசெருக்கிக்
கோட்டமுற்றழியாதறிவுறுப்பவர்போற்கோட்டமுற்றழிகயமுகத்தன்
வாட்டிறற்சூரன்முதலியோர்ச்செகுத்தமருப்பொடுசுடர்வடிநெடுவேல்
காட்டியகரத்தினறுமுகத்தேவுங்கணேசனுமிருபுடைவயங்க. ௫

உருவினிற்பெருமைபெருமையன்றுருவிற்சிறுமையெய்தினுமுமைபாக
னருளினிற்பெருமைபெருமையென்றுலகைவகிலமுந்தெளிதரக்காட்டி
மருமலர்க்கிழவன்முதலியோர்புறத்துமன்னிஉநகுநடைக்குறுந்தாட்
பெருவயிற்றழல்கால்குழிவிழிப்பூதப்பெருங்கணமருகுநின்றேத்த. ௬

கண்ணிலைக்கடங்காத்திருவுருவழகைக்காண்டொறும்பலமுதான்கொண்ட
பெண்ணுருவெடுப்பக்கருதிநீண்முகுந்தன்பிரிவிலாதொருபுடையமர்ந்த
பண்ணிசைமொழியாள்வனப்புமெம்பெருமான்பார்வையுநோக்கிமற்றெமக்கிங்
கெண்ணியவெண்ணமுற்றுறுதினியென்றெழுந்தவக்கருத்தினைமீட்ப. ௭

ஆடலைத்தொடங்குந்தொறுந்திருமேனியழகினைக்கண்களான்மடுத்து
வாடருமயல்பூண்டவசராய்ச்சத்தியின்வழிப்பதம்பெயர்தராநிலையை
நாடகத்தலைவர்க்கெதிரடியேங்கணடிப்பதற்கஞ்சுதுமென்னுஞ்
சேடமைவனப்பினுருப்பசிமுதலோரவிநயச்செய்கையாற்மறைப்ப. ௮

மல்லலங்கமலத்திருவடிநோவமறுவலுமறுவலுமோடிக்
கல்லொளிபரப்புமணிமுடியமூத்துங்கடவுளர்தொகையினைவிலக்கு
நல்லமெய்ப்பணியைநான்பெறநல்கியவரவர்க்கருள்செய்துபோக்கி
யெல்லைதீர்கருணைமலையினோலக்கத்திருந்தனனென்னையாளுடையான். ௯

அறுசீரக்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இருந்தருள்காலைவெண்கேழிமம்பொதியடுக்கலீன்ற
முருந்திளமுறுவற்செவ்வாய்முகிழ்முலைக்கடவுட்கற்பிற்
றிருந்திழையுலகமீன்றசெல்விமுத்தேவுங்காணப்
பெருந்தகையடிகள்போற்றியிதுவொன்றுபேசலுற்றாள். ௧௦

உமாதேவியார்வினா.

கடப்படும்வீடுபேறன்றிருவடிக்காட்சிதன்னாற்
கிடைப்பதாமறையீறாய்ந்துகிளர்தவந்தியானநிட்டை
நடைப்படிமுதிர்ந்துவாய்ந்தநல்லவர்க்கன்றியுன்ற
னடித்துணைகாண்டலேனோர்க்கரிதரிதாகுமம்மா ௧௧

ஏனையோர்விலங்குபுட்களிங்குனைக்கண்டுமுத்தி
மேனிலத்துறுவதெவ்வாறென்றனள்வினாதலோடு
மூனுடையுயிர்கள்யாவுமுய்யுமாகருணைகூர்ந்து
மானமர்கரத்துப்புத்தேள்வாய்மலர்ந்தருளுமன்றே. ௧௨

சிவபெருமான்விடை.

அரிபரந்தகன்றவுண்கணலர்முலையணங்குகேள்யாம்
பரவெளிப்பரப்பின்வைகும்பண்பினேமுலகமெங்கும்
விரவியேநிறைந்துநிற்பேம்விளங்குமெய்ஞ்ஞானம்பாதந்
தரைமுதலுலகமூன்றுபாதம்வான்றலத்துமேவும். ௧௩

ஆவகைவயங்குநம்மையாவருமறியமாட்டா
ரோவருஞ்பெருமைசான்றவுத்தமதலங்கடம்மி
னேவருங்காணவாழ்வேமென்றலுமுவகைபொங்கி
யாவையத்தலங்களென்றுட்கெம்பிரானருளிச்செய்யும். ௧௪

வேறு.

திருச்சேதுவாலவாய்சிராப்பள்ளிதிருவழூர்திருவையாறு
தருச்சூழுமிடைமருதூர்யாமென்றுநடம்புரியச்சலியாத்தில்லை
கருச்சாருமுதுகுன்றமருணகிரிதிருவிரிஞ்சைசைவினோத்தூர்
மருச்சூழுங்குழலுமையேநின்னொடியாமகிழ்ந்துறையும்வளஞ்சூழ்காஞ்சி.

ஆலவனங்காளத்திதிருச்சயிலஞ்சித்தவடமடியார்சைவக்
கோலநிறைவிருபாக்கந்திரியம்பகந்திருக்கோகன்னமின்புஞ்
சாலவுதவுச்சயினிமாகாளங்காசிகேதாரமென்றுங்
காலனுறாப்பிரபாசமிமயமலைமந்தரஞ்சீர்க்கயிலையாதி. ௧௫

எண்ணிலவாம்யாமருவுமிடங்களெனவுரைத்தருளவிறைவிகேளா
வண்ணமலேயிவற்றுள்ளுஞ்சிறந்ததலம்யாதென்னவருளிச்செய்வான்
புண்ணியமெய்த்திருக்காஞ்சியெவற்றினுமேம்படுபுரியாமவ்வூர்தன்னை
யெண்ணினுங்கேட்பினுஞ்சொலினும்வணங்கினும்பேரின்பவீடெவர்க்குமெல்கும்.

அப்பதியினெஞ்ஞான்றுமகிழ்கூர்ந்துநின்னொடுமேமாவேமவ்வூர்
பற்பலர்சூழவிமுத்தத்தலத்தினுமேம்பட்டதுவாமவிமுத்தத்தி
னிப்புவனங்காப்பயாம்விச்சுவநாதப்பெயராளிலிங்கந்தாபித்
தொப்பருஞ்சீர்பெறவைத்தேங்காஞ்சிநகரிடத்தொருமாமூலந்தன்னில்.

தோற்றநிலையிறுதிபடைப்பருளென்னுமைந்தொழிலுநடாத்துயாமே
யேற்றமுடையேகம்பநாதனெனுந்திருப்பெயர்பூண்டிலிங்கமாஞ்
தேற்றுமிதனுங்காஞ்சியெவற்றினுக்குமதிகமெனத்தெளிவாயங்கட்
போற்றியொருநாளேனுமமர்ந்துறையின்முத்திநிலைபுகுதலாமால். கசு

வழிச்செலவிற்புகுந்தேனுமறந்தேனும்பொருளாசைமருவியேனுந் [தி
கழிப்பருஞ்சீர்க்காஞ்சியினிற்கணப்பொழுதுவதிந்தோருங்கலப்பர்முத்
பழிப்பிலாக்காஞ்சியெனத்தன்னியல்பானொருபொழுதுபகரிற்கண்ணி
லொழிப்பரும்பாதகமனைத்துமொழிந்துபெருந்துறக்கவீடுறுதலுண்மை.

அக்காஞ்சிநவின்றசப்பொருட்டுநாம்படைத்துவைத்ததாதலாலே
யெக்காலுமங்கரினகத்துயரும்வினைத்துயருமெய்துவாகு
மைக்காளஞ்சுமைமிழ்றின்மணந்தவிழ்மணிநீவியல்குலெட்டுத்
திக்காளர்தமைப்பொருதும்பெருநீர்த்திநகரவளஞ்சிறிதுகேட்டி. உக

கலிமுதற்றீங்கணுகரியவேலியெனச்சூழ்பொழிலுங்காவன்மாறு
நிலையுடையுட்சேனையெனக்குவளைவிழிநந்தனநீள்வனமுந்தேவ
குலநிறைபஃறீபமெனநிரைக்கமலக்குளிர்தடமுங்கயிலைதன்னி
லிலகுறுபல்குவடென்னப்பலதளியுமுடைத்தாகுமெறிநீர்க்காஞ்சி. உஉ

பம்மைகம்பைபுண்ணியநீர்மஞ்சனதிவேகவதிபாலிசேயா
றென்பனவேழுலகுமிடுமேழ்மாலையெனவொழுகுமெய்துவோரைச்
செம்பதுமக்கரமெடுத்துவிளையகவிளிப்பதுபோற்றெங்குநீளும்
வம்பவிழ்பூஞ்சோலைகளுண்மழைமறைத்தகதிர்போலவயங்குமூதூர்.

ஐயிருநூற்றுயர்சாகைச கைகளாப்படைத்திங்கணமர்ந்துவாழு
மையனேயென்முதலென்றெழுகோடிமனுக்களுபமனுவால்யார்க்கு
மையமறத்தெரிவிக்குமறைமாவின்சாரூபமடைந்தபோலு
மையநறுமாம்பொழில்களெஞ்ஞான்றுங்கனிகளுறுதமலுமாங்கண். உச

விப்பிரர்கண்முதலனல்வர்சங்கரர்மெய்த்தொழிலர்மயிர்வினைஞர்செக்கார்
செப்பிடையர்தச்சர்கொல்லர்பொன்வினைஞர்தேவகணிகையர்கள்கூத்தர்
விற்புருவப்பாத்தைமுதலோர்தெருக்கள்கலப்பின்றிவெவ்வேறாகிப்
பொற்பநீண்டகன்றெழுங்காய்மதிக்கணிசெய்கதிர்களெனப்பொலியுமாங்கண்.

தந்தைதாயிரண்டொழியப்பிறவெலாங்கொளத்தகுமாவணங்கண்மல்கு
மெந்தவூர்வேதவேதாந்தங்கண்மூவுலகுமெடுத்துக்கூறு
மந்தவூரெனக்கோடிமடமயிலேதவ்விவன்பதயன்பேரென்ன
முந்துமிருக்கோதுமஞ்சென்பகுதியடைவொடுபூசைமொழியுமாதோ.

திசைமுகனுலஞ்சிக்கப்படுதலிஞற்காஞ்சியெனத்திசைபோய்மல்கு
மிசையுடையதிதுபிரமலோகமென்றுமிதனுற்பேரெய்துமாற்ரு
னசைவிலாதங்குறைவோரெல்லார்க்கும்வீடுதவுமவ்வூர்நாப்பண்
வசையின்றித்திப்பியமாய்ப்புண்டரிகம்போலெமக்குவயங்குங்கோயில்.

அங்கதனிற்சோதிலிங்கவடிவாகியாமென்றுமமர்வேமிவ்வா [னுந்
திங்கிரண்டாமறைவிளம்புஞ்சந்தோகாமறையெம்மையொளிவானென்
துங்கநகர்தனைப்பிரமபுரமென்னுமிறுதிமறைசுவர்க்கமென்னும்
பங்கமறுதயித்திரியஞ்சோதிசூழ்சுவர்க்கமெனப்பகராநிற்கும். உஅ

அப்பிரமபுரங்காஞ்சிநகரல்லால்வேறில்லையாகுமென்றே
செப்புமுபநிடதமெலாஞ்சிவாகமங்களொடுமுழக்குஞ்செல்வீயிந்த
வைப்பினைச்சேரிடையாஞமாயிடையாயினுமிருந்துவனைங்கிற்கண்ணி
லெப்பெரும்பாவமுநீங்கிவீடெய்துமுனக்குண்மையியம்பினேமால். உகூ

என்றிறைவனுலகுய்யவினவுமலைப்பெருமாட்டிக்கியம்பும்வாய்மை
யன்றுவினுவியசனற்குமாரனுக்குத்திருநந்தியறைந்தானன்னேன்
வென்றபொறிவாதராயணற்குரைப்பவவனெனக்குவிளம்பல்செய்தான்
குன்றனையபெருந்தவத்தீர்சிவனைக்காண்பதற்கேதுவிதுவேகொண்மின்.

பாவருமந்தணமாகுமிக்காதைமெய்யன்பிற்படிப்போர்கேட்போர்
கரிசுறுநோய்நீங்கிநெடுநாட்புவியின்மக்களொடுங்களித்துவாழ்ந்து
வாகுணாய்மறுமையினும்பெரும்போகமினிதுண்டுமாறுமுத்தி
விரவுவரென்றுவாங்கொள்ளச்சூதமுனிமுனிவர்க்குவிளம்பினுனல். ஙக

தலவிசேடப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - சசச.

# திருநெறிக்காரைக்காட்டுப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மெய்த்தவர்யாவருமங்கதுகேட்டுவிழித்துணைநீர்வாரக்
கைத்தலமுச்சிமுகிழ்த்துமயிர்ப்புளகங்கண்மலிந்தயர்வார்
முத்திபெறற்குயர்காரணமின்றுதொகுத்துமொழிந்தனைநீ
யத்தலமேன்மையனைத்தும்விரித்தருளென்றலுமச்சூதன். க

கச்சியுளெண்ணறுதீர்த்தநிறைந்துளகாமுறுபலதானம்
பொச்சமில்போகமும்வீடுமளிப்பனபோக்கருமேன்மையவா
மச்சமறுத்துவியாதனெனக்கருள்செய்தமுறைப்படியே
யிச்சையினேதுவலந்தணிர்கேண்மினெனச்சொலலுற்றனனல். உ

இந்நகரிற்புகல்சத்தியமாவிரதப்பெயரிற்குணபாற்
றன்னிகர்மெய்த்தலமொன்றுளதங்கமர்சத்தியவிரதீச
னென்னையுடைப்பெருமாட்டியுமோரிருமைந்தருமுடன்மேவ
மன்னியிருத்தலினத்தலமேன்மையையாவர்வகுக்கவலார். ங

சத்தியசத்தியர்சத்தியசோதகர்சத்தியசங்கற்பர்
சத்தியகாமரிருத்தலினப்பதிசத்தியவிரதமதாஞ்
சத்தியநன்னெறியார்க்கும்விரைந்தருள்செய்துறுதானமதிற்
சத்தியமாவிரதத்தடமொன்றுளதத்தடநீராடி. ச

புதனமர்நாளினினீர்க்கடனுதிபொருந்தமுடித்தங்க
ணிதமுறுசத்தியமாவிரதீசரையேத்திவணங்குநர்தாங்
கதவினைதீர்ந்தருளுண்மையுணர்ந்துகலப்பர்கண்முத்தியினை
மதமுறுகாமமயக்கமனைத்துமறுத்துயர்முனிவீர்காள். ௫

மனைவியர்மக்கணிலங்கலைசெல்வமுமற்றெவைவேண்டினு
மனையவைமுற்றுமளித்துயர்வீடுமளித்திடுமத்தீர்த்த
மினையதடம்பதியிந்திரதீர்த்தமுமிந்திரபுரமுமெனப்
புனைபெயரும்பெறுமப்பெயரெய்தியகாரணமும்புகல்வேன். ௬

இந்திரனரசிருக்கை.

மதுமலராளிதன்மேதகுகற்பம்வராகமதுறுமாரு
முதுமனுவந்தரநாட்சிவிமென்றொருவாசவன்முன்னுளனால்
விதுவினையொப்பனரம்பையராகியமென்குமுதங்களிடைப்
பொதுவறுதானவமாக்கடலுக்குவடாதெரிகனல்போல்வான். ௭

கடவுளர்சேனைப்பங்கயபானுகற்சிறையரிவயிரப்
படையவனோர்நாட்கடவுளவைக்கட்பாசிழைவெதிர்பொருதோட்
படவரவல்குற்சசிபுடைமேவப்பன்மணியரியணைமேல்
வடிவமடங்கன்மேலொர்மடங்கல்போன்மெனவைகினனால். ௮

இருபுடைவெண்கவரித்தொகைதுள்ளமிசைக்குடையெழில்செய்ய
விருதுகண்மாகதர்சூதர்முழக்கவியன்மணிமாநிதியைந்
தருவொடுதேனுவிழிக்கடைநோக்கினைநோக்குபுதலைநிற்ப
வருகுறுகின்னரர்யாழுமிர்தஞ்செவியாரவிருந்தயர. ௯

மணங்கமழ்தோளணிகற்பகமாலைதுளித்தமதுப்புனல்பாய்ந்
துணங்கருமின்பவிழிப்புனலொப்பவுறைத்துவிழிக்கெல்லா
மணங்குபுரிந்திடல்கண்டுபுலர்த்துநர்போலவிர்சாந்தாற்றி
நுணங்கிடைமங்கையரோவறவெங்கணுநொய்தினசைத்தனுக. ௧௦

அரம்பையுருப்பசிமேனகைமுதலியவரிமதர்விழிமடவார்
நிரம்பியகாமநலங்கனியவிநயநெறிமுறைகரமசையப்
பரம்புமிடற்றிசைவிம்மிடவிழியிணைபுடைபெயர்பயில்விறேடும்
வரம்பெறுமற்புதமின்னவிர்கொடியெனமகிழ்நடமெதிர்புரிய. ௧௧

மருத்துவர்வானவர்கின்னரர்சித்தர்வசுக்கண்மருத்துக்க
ளுருத்திரர்சாத்தியர்கந்தருவர்தருடுக்கணவக்கோள்க
டிருக்கிளர்மெய்த்தவர்யோகிகள்கையிணைசென்னிமிசைக்குவியா
நெருக்கினுளெய்தியிறைஞ்சிமருங்குறநிரல்படநிற்பவரோ. ௧௨

கணங்கொடயித்தியர்யாவரும்வந்துகடைத்தலைவாய்தலின்மாட்
டணங்குபுசெவ்விகிடைத்திலர்நிற்பவொழிந்தவர்தங்குறைதீர்த்
தணங்கருமின்பவெள்ளத்திலழுந்தியளப்பருசெல்வத்தா
னிணங்கலர்கோளரியின்னணமேவுழியெண்ணினனிவையெல்லாம். ௧௩

இந்திரனரசியலைவெறுத்தல்.

வேறு.

இருவினையொப்புவாய்ந்தபருவம்வந்தெய்தலாலே
மருவருந்துறக்கவைப்பினரசியல்வாழ்க்கைதன்னை
யருவருத்துவர்த்துக்காவற்சிறப்பிடையகப்பட்டோரின்
வெருவரும்பதைக்குமஞ்சும்வேறிவைகருத்துட்கொள்வான். ௧௪

அழியுமிவ்விடயவாழ்விற்களித்திருந்தந்தோகெட்டேன்
பழிபவக்கடலிற்காலப்பாந்தள்வாய்க்கிடந்துநாணேன்
வழிமுறையறியாமாயவல்லிருட்படுகர்ச்சேற்று
ளிழியுமூர்ப்பன்றியேபோலுழந்தவென்னறிவுநன்றால். கரு

அருவினையுலகமெல்லாம்படைத்தளித்தழிக்குங்காலங்
கருவுறுமெவையுங்காலவயத்தவாங்காலந்தான்மற்
றொருபொருள்வயத்ததன்றாலுந்தியோன்கற்பத்தீரேழ்
பொருவிலிந்திரர்கண்மாய்வர்பொன்றுவர்மனுக்கடாமும். கசு

ஓதுமிக்கற்பம்வேதற்கொருதினமங்ஙனாண்முப்ப
தாதலோர்மதியாந்திங்களாறிரண்டாயினாண்டா
மேதமில்வருடநூறேலிருவகைப்பரார்த்தமாகப்
போதரும்போதிலன்னான்பொன்றுவன்மன்றமாதோ. கஎ

அம்மலர்க்கிழவன்காலமரிக்கொருதினமன்னோனு
மம்முறைதிங்கள்கூடுமாண்டுநூறெய்திற்பொன்று
மம்மவோசீசீயிந்தவனித்தியவாழ்வுவேண்டே
னம்மையில்வீடுபேற்றிற்குபாயமேயறிதல்வேண்டும். கஅ

எண்ணருந்தவந்தானங்கள்பட்டினியெச்சந்தானே
புண்ணியநன்னீராடப்போதலோமுத்திக்கேது
நண்ணுமிவ்வனைத்துந்தேறநமக்கெலாங்குருவாம்பொற்பே
ரண்ணலைவினவுதுமென்னத்துணிந்தனனமரர்கோமான். ககூ

அவையகத்துள்ளார்க்கெல்லாம்விடையளித்தெழுந்துபோந்து
நவையறவிரைவினந்தப்புரத்தினைநண்ணியங்கட்
புவிபுகழ்குரவற்கூவிப்போற்றிநின்றிதனைவிள்வான்
சிவியெனத்திசைபோங்கீர்த்தித்தேவர்கட்கிறைவன்மன்னோ. உ0

இந்திரன்தேவகுருவிடம்முறைகூறல்.

இவ்வரசியற்கைதன்னிலினியெனக்காசையில்லை
யவ்விதிமுகுந்தனேனோர்வாழ்க்கையுமவாவுகில்லேன்
மெய்வகையுணர்ந்துமுத்திமேவுதற்குபாயமொன்று
செவ்வனேநேர்ந்துரைத்தியென்னத்தேசிகன்றேர்ந்துசொல்வான் உக

இந்திரனுக்குதேவகுருவுபதேசித்தல்.

நன்றுநீவினவுமுத்திநற்றவம்வேள்விதானங்
கன்றுபட்டினிவேறொன்றாற்காண்பரிதாகுமைந்தா
துன்றியமாயவாழ்க்கைத்தொடக்கறுத்துய்யக்கொள்வா
னொன்றுமெம்பெருமானுள்ளானவன்றிறமியம்பக்கேட்டி. உஉ

கலிவிருத்தம்.

குறைவிலாமங்கலக்குணத்தனுதலி
னிறைமலமறுதியினீங்கிநிற்றலி
னறைகுவர்சிவனெனவறிவின்மேலவ
ரிறையவன்பெருமையையாவர்கூறுவார். உங

மேலெனப்படுவனவெவைக்குமேலவன்
மாலெனப்படுவனவெவையுமாற்றுவா
னூலெனப்படுவனவெல்லாநுவன்றவன்
வேலெனப்படும்விழிபாகமேயினான். உச

பங்கயன்றன்னைமுன்படைத்துமான்முதல்
புங்கவர்தம்மைப்பினுதவும்பொற்பினா
னங்கவனிலனெனிலகிலலோகமும்
பொங்கியவல்லிருள்பொதிந்தநீரவே. ௨௫

பகலிரவிலதுளதெனும்பகுப்பிலா
வகலருமிருள்பொதியனாதிகாலையி
லுகலரும்பரசிவனொருவனேயுளன்
மிகுமுணர்வவனிடைவெளிப்பட்டோங்குமால். ௨௬

எங்குளயாவையுமிவன்வயத்தவா
மெங்கணுமிவனொருவயத்தினெய்திடா
னெங்கணும்விழிமுகமெங்குங்கால்கர
மெங்கணுந்திருவுருவிவனுக்கென்பவே. ௨௭

அரியயனமரர்களசுரர்யோகிக
ளிருமாறுவேதவேதாந்தம்யாருமிப்
பெரியவனடியிணைகாணும்பெட்பினாற்
றெரிகிலர்மாறுகொண்டின்னுந்தேடுவார். ௨௮

அவனவளதுவெனுமனைத்தொன்றுமிச்
சிவனலான்முத்தியிற்சேர்த்துவாரிலை
துவளருமிம்முறைசுருதிகூறுமா
லிவனடிவழிபடின்முத்தியெய்துவாய். ௨௯

பன்னுவதெவன்பலபரிந்துநெஞ்சினு
மன்னியர்தம்மையொழித்தரனையேத்துதி
யின்னதேவீட்டினுக்கேதுவாமெனும்
பொன்னுரைமனக்கொடுபுகலுவான்சிவி. ௩0

குரவனேயயனரிகுரவனேசிவன்
குரவனேதந்தைதாய்குரவனேயெலாங்
குரவனேயென்றுநூல்கூறுமுண்மையைக்
குரவனேயென்னிடையின்றுகாட்டினாய். ௩௧

உன்பெருங்கருணையாலுறுதிபெற்றனே
னின்பொடுமெய்விடத்தெவ்விதிப்படி
பொன்பொதிசடையனைப்போற்றுமாறிது
வன்பொடுமெடியனேற்கருளுகென்றலும். ௩௨

கடலுடைவரைபபினிற்காஞ்சிமாநக
ரிடனுடைக்குணக்கினிலெய்தினாரெலாம்
விடலருஞ்சத்தியவிரததானத்தின்
முடிவில்சத்தியவிரதீசன்முன்பரோ. ௩௩

மேற்றிசைச்சத்தியவிரததீர்த்தமொன்
றுற்றவுமேன்மைபெற்றுடையதாயிடைப்
போற்றுறும்பசுபதிவிரதம்பூண்டுசென்
றாற்றெழுந்துறுதடத்துதகமாடியே, ௩௪

விதியுளிமுடித்துநித்தியநைமித்திகம்
புதியநீறுடலெலாம்பொதிந்துபுண்டர
மதிநுதல்விளங்கிடவக்கமாமணி
நிதியெனப்பூண்டுநல்லொழுக்கநீடியே. ௩௫

தெள்ளொளிப்பளிங்கெனச்சிறந்தசெய்விசால்
வெள்ளொளிச்சத்தியவிரதநாதனை
யுள்ளகக்கமலத்தின்வழிபட்டுண்மையா
னள்ளலர்க்கடந்தவமுந்திநண்ணுவாய். ௩௬

என்றலுமிந்திரனிறைஞ்சியென்கொலோ
வென்றிகொள்சத்தியவிரதங்கேள்வியாற்
றொன்றுளதொடர்புபோற்சுழலுமென்மனஞ்
சென்றுபற்றியதெனக்குரவன்செப்புவான். ௩௭

உள்ளதுகூறினேயும்மையாயனை
யள்ளிலேக்குலிசிநீயணைந்துபுந்திநாள்
வெள்ளநீர்ச்சத்தியவிரதமூழ்கியீண்
டெள்ளரும்விண்ணகர்க்கிறைமைபெய்தினாய். ௩௮

ஒருபொழுதாடினரும்பர்சோனிட
மிருபொழுதயனிடமெண்ணுமுப்பொழு
தரியிடநாற்பொழுதாயின்முத்தியே
மருவுவர்யாரதன்வண்மைகூறுவார். ௩௯

புந்திநாண்முழுகுநர்புகுவர்முத்தியி
னந்தநாண்மூழ்கலிவாரசநீயுமிப்
பந்தமில்வீடுறற்பாலையாயினை
மந்தணமிதுவெனக்கேட்டவாசவன். ௪0

இப்பெருந்தீர்த்தநீரெற்றைஞான்றினு
மப்புதவாரநாளதிகமாயதென்
செப்புதியென்றலுந்தேசிகப்பிரா
னெப்பறுகருணையினுரைத்தன்மேயினான். ௪௧

சத்தியவிரதர்புதனுக்குவரமருளுதல்.

கொச்சகக்கலிப்பா.

மதிக்கடவுடானைதனைமணந்தீன்றமகவான
புதக்கடவுள்கிரகநிலைபெறுவதற்குப்புரிதாதை
கதித்துரைத்தமொழியாறேகருதருஞ்சத்தியவிரதப்
பதிக்கணணைந்துயர்தீர்த்தம்படிந்தாடித்தவஞ்செய்தான். ௪௨

மேதகுசத்தியவிரதப்பெருமானும்வெள்விடைமேன்
மாதுமையாளுடனேறிவயக்கரிமாமுகனிளையோன்
காதல்புரியருணந்திகணநாதர்புடைசூழ
வாதரமோடெழுந்தருளித்திருக்காட்சியளித்தருள. ௪௩

கண்டுபரவசனாகிக்கைதொழுதுபெருங்காதன்
மண்டியெழமயிர்சிலிர்ப்பமனத்தடங்காப்பேருவகை
கொண்டுநிலமுறவீழ்ந்துகுனிந்துருகிவிழிதுளிப்பத்
தொண்டனேனுய்ந்தேனென்றெழுந்தாடித்துதிசெய்வான். ௪௪

நெடியோனுமலரவனுநேடரியதிருவடிக்
ளடியேனுக்கெளிவந்தவருட்கருணைத்திறம்போற்றி
யொடியாதவெண்குணங்களுடையானேயெனையுடையாய்
கடியார்சத்தியவிரதநாயகநின்கழல்போற்றி. சரு

என்றேத்தியெங்கையெனயானிகரகநிலைபெறவுங்
குன்றாதுன்றிருவடிக்கீழ்மெய்யன்புகூர்ந்திடவு
மின்றாதியென்வாரத்தித்தீர்த்தம்படிந்துபொறி
வென்றோர்முன்னேயினிராட்டிப்பயனெய்திவீடுறவும். சசு

வேண்டுமெனவிரங்கேற்பவளித்தருளிவெள்விடைமே
லாண்டகையங்ககன்றனனாலன்றுமுதலத்தீர்த்தம்
பூண்டபுதவாரத்துச்சிறப்பெய்தும்புந்தியுறக்
காண்டியெனுங்குரவனுரைகாரூர்திசெவிமடுத்தான். சஎ

இந்திரன்சத்தியவிரதமடைந்துபூசித்தல்.

அப்பொழுதேயரசுரிமையம்மறையோன்புடைவைத்துச்
செப்பருஞ்சத்தியவிரதத்திருநகரின்விரைந்தெய்தி
முப்பொழுதுநீராடிமுழுநீறுமெய்பூசி
மெய்ப்படிகண்டிகைபூண்டுபுண்டரமுறுநுதல்விளங்க. சஅ

உருத்திரமுங்கணித்துள்ளப்புண்டரிகத்துமைபாகன்
றிருப்பதங்கள்சிந்தித்துக்கோயிலினுட்சென்றெய்தி
யருத்தியொடும்பூசனைசெய்தாராமைமீக்கொள்ளப்
பெருத்தெழுந்தபேரன்பிற்பெருமானைத்துதிக்கின்றான். சகூ

இந்திரன்துதித்தல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மறைமுடியின்னுந்தேறுமலர்சிலம்படியாய்போற்றி
யறைபுனலுலகமெல்லாம்படைத்தளித்தழிப்பாய்போற்றி
சிறைநிறைவாசத்தெண்ணீர்ச்சத்தியவிரததீர்த்தத்
துறைகெழுவரைப்பின்மேயசுந்தரவிடங்காபோற்றி. ரு0

அண்ணலேவிடயத்துன்பமாற்றிலேனோலமோல
மெண்ணரும்யோனிதோறுந்திரிந்தலைந்தெய்த்தேனோலங்
கண்ணினுண்மணியேவேறுகண்டிலேன்களைகணோலம்
புண்ணியமுதலேயின்பப்பூரணாவோலமோலம். ருக

புழுப்பொதிந்தசும்புபாயும்புன்புலையுடலையோம்பிக்
கழித்தனன்காலமெல்லாங்கடையனேன்பொறிகள்யாண்டு
மிழுத்திழுத்தலைப்பநொந்தேனினித்தினைப்பொழுதுமாற்றேன்
சழக்கறுத்தருள்வாயுன்றன்சரணமேசரணமையா. ருஉ

இந்திரனுக்குசத்தியவிரதர்காட்சிகொடுத்தருளுதல்.

அடைக்கலமடியேனென்றென்றழுதிரந்தயருங்காலை
விடைத்தனிப்பெருமானன்னோன்பத்தியின்விளைவுநோக்கி
நடைப்பிடியுமையாளோடுநண்ணிநீவேண்டிற்றென்னை
யெடுத்துரைதருதுமென்றானிந்திரன்றொழுதுவேண்டும். ருா

வினைவழிப்பிறந்துவீந்துமெலிந்தநாமெனல்லையிலலே
யனையவற்றடிகேளுன்றனடிதொழப்பெற்றிலேனு
னினைவருந்தவத்தாலின்றுநின்னருட்குரியனானே
னினிவரும்பிறவிமாற்றியென்றனையுய்யக்கோடி. ௫௪

இத்தலந்தீர்த்தமென்றன்பெயரினானிலகவேண்டு
மத்தனேயென்னலோடுமவ்வகையருளிமீளா
முத்திசேர்கணநாதர்க்குண்முதல்வனுந்தன்மைநல்கிப்
பைத்தபாம்பாரம்பூண்டபண்ணவனிலிங்கத்தானான். ௫௫

அற்றைநாண்முதலச்சூழலிந்திரபுரமாயங்கட்
கற்றைவார்சடையீரோர்காற்கண்ணுறப்பெற்றோர்தாமும்
வெற்றிவேற்காலன்றன்பால்விரவிடார்கருவிலெய்தா
ரிற்றதன்பெருமைமுற்றும்யாவரேயியம்பவல்லார். ௫௬

சத்தியவிரதங்காரைத்தருவனஞ்செறிதலாலே
சித்திசேர்ந்தவர்க்குநல்குந்திருநெறிக்காரைக்காடென்
றித்திருப்பெயரினோங்குமென்பரான்மாசுதீர்ந்த
வுத்தமக்கேள்விசான்றவுணர்வுடையும்பர்மேலோர். ௫௭

திருநெறிக்காரைக் காட்டுப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௫௦க

# புண்ணியகோடீசப்படலம்.

கலிநிலைத்துறை.

செச்சைச்சடையந்தணிர்தேமலரோடைசூழ்ந்து
மேயசசத்தியமாவிரதத்தலமேன்மைசான்றுங்
கச்சிப்பதியிற்கவர்புண்ணியகோடிமேன்மை
நச்சிப்புகல்கின்றனநன்குமதித்துக்கேண்மின். க

மின்பாய்பொழிற்சத்தியமாவிரதத்தலத்தின்
றென்பாலதுபுண்ணியகோடிநந்தேவன்வைப்பு
வன்பாலர்களெய்தரும்புண்ணியதீர்த்தமாடே
யென்போலிகட்குஞ்சிவப்பேறெளிதெய்துமங்கண். ௨

சிவபெருமானிடத்துவிஷ்ணுவரம்பெறுதல்.

மலர்மேயவன்மேகநல்வாகனகற்பமொன்றிற்
றலமேழ்புகழ்நாரணன்றாமரையாளியாதி
யுலகேழையுமீன்றிடமோசையினும்பர்கோனைப்
பலநாண்முகிலினுருக்கொண்டுபரித்தல்செய்தான். ௩

நம்மானிரங்கிக்கடைக்கண்ணருணல்கிமாலோய்
வம்மோசுராரண்டினிலாயிரவானெடுமற்றிங்
கிம்மேகவுருக்கொடுதாங்கினையெம்மைவேண்டு
மம்மாவரநல்குதுமோதுதியென்னவன்னோன். ௪

எந்தாயொருநின்றிருமேனியிடப்புறத்து
வந்தேனடியேனுயர்நின்னருள்வண்மைதன்னா
னந்தாதவிவ்வாழ்க்கையுமெய்தினன்ஞாலமுற்றும்
பைந்தாண்மலரோனையுமின்றுபடைத்தல்வேட்டேன். ௫

அவ்வாற்றலளித்தருளென்னுமரிக்குநாத
னிவ்வாற்றல்கச்சிப்பதியெய்தியிலிங்கந்தாபித்
தொவ்வாநளினங்களினூலுயர்பூசையாற்றிற்
செவ்வேபெறுகிற்பையெனத்திருவாய்மலர்ந்தான். சு

விஷ்ணுகாஞ்சியில்சிவபூசைசெய்தல்.

அங்கப்பொழுதேவிடைகொண்டருட்காஞ்சியெய்திப்
பொங்கிப்பொலிதீர்த்தநறும்புனலாடிச்சூழுந்
தெங்கிற்பொலியிந்திரநன்னகர்த்தென்றிசைக்கட்
டுங்கச்சிவலிங்கமிருத்திமெய்யன்புதோன்ற. எ

தெண்ணீர்த்தடமொன்றுவகுத்துத்திருந்தமூழ்கி
வெண்ணீற்றணியக்கமணித்தொடைமெய்விளங்கக்
கண்ணீர்க்கமலம்பலகொய்துகருத்துவாய்ப்ப
வண்ணீர்ச்சிவபூசனைநித்தலுஞ்செய்துவாழ்ந்தான். அ

கஜேந்திரன்தொண்டுசெய்தல்.

வேறு.

அன்னோனேவன்மெய்ப்பணியாற்றுமன்புந்தத்
தன்னேரில்லாவோர்மதவேழந்தானெய்தி
யென்னையகனேயென்பணிகொள்வாயென்றேத்திப்
பொன்வாடோன்றமுன்னரெழுந்துபுனலாடி. கூ

நாளலர்தாமரைபாதிரிவில்வநறும்புன்னை
தாளுயர்சண்பகமல்லிகைதண்கழுநீர்மௌவல்
கோளறுகோங்குமுதல்பலகொய்துகொடுத்தென்றும்
வேளையளித்தவனுண்மகிழ்வித்திடுமந்நாளில். க0

கஜேந்திரனைமுதலைப்பற்றல்.

ஒப்பகனீர்நிறைபூந்தடமொன்றுறுபூக்கொய்வான்
சீர்தருதிண்கரிசேறலுமங்கொருவன்மீன
நீரிடைநின்றுவெகுண்டடிபற்றிமிர்ந்தீர்ப்பக்
காரொலிகாட்டியக்கன்கரையீர்த்ததுகாய்வேழம். கக

இவ்வகைதண்புனலிற்கரைமீதிவையோவாமே
தெவ்வுடனீர்ப்புழிபாண்டுகளெண்ணிலசென்றேகக்
கைவரையாற்றரிதாயலறிக்கருமாமேகத்
தவ்வடிவோனையழைத்ததுமூலமெனக்கூவி. கஉ

விஷ்ணுகஜேந்திரனைக்காத்தல்.

அண்டரெலாம்பாமூலமலமென்றகல்போழ்திற்
புண்டரிகக்கட்புண்ணியனன்புள்ளரசின்மேல்
கொண்டெதிரெய்திக்கரியரசெய்துங்கொடுவெந்நோய்
கண்டனெக்கானஞ்சலையஞ்சேல்களிறென்னா. கங

ஆழியெறிந்தானதனுயிருண்டான்கரியோடும்
வாழியகாஞ்சிமாநகரெய்திச்சிவபூசை
வேழமளிக்குமேதகுபள்ளித்தாமத்தா
லூழ்முறையாற்றித்தவமணிசெய்தங்குறைகாலை. கச

எண்ணருவாணேரின்னமுன்னாடற்கரியானைக்
கண்ணிணையாரக்காண்டகுகாதல்கைமிக்கங்
குண்ணிகழன்பானெக்குருகிக்கனுறைசிந்தப்
புண்ணியவேதப்பழமொழியோதிப்புகழ்கிற்பான். கரு

விஷ்ணு துதித்தல்.

சொச்சகக்கலிப்பா.

நீராய்நிலனாய்நெருப்பாய்வளிவானு
யேராரிருசுடராயாவியாயாவைக்கும்
வேராகிவித்தாய்விளைவாகியெல்லாமாம்
பேராளாவெங்கள்பிரானேயடிபோற்றி. கசு

அண்டபகிரண்டமனைத்துமகத்தடக்கிக்
கொண்டுநிறைந்தோங்கியபேரின்பக்குரைகடலே
தொண்டரெலாமுண்ணத்தெவிட்டாச்சுவையமிர்தே
தண்டலைசூழ்கச்சித்தலைவாவடிபோற்றி. கஎ

மாறுவறக்கடவுண்மானவடியேனு
மேறுகித்தாங்கவருள்சுரந்தவெம்மானே
சீறுதுமைகளிப்பத்தேவியாக்கொண்டெனிடம்
கூறுடைவைத்தகுணக்குன்றேயடிபோற்றி. கஅ

துக்காடையாதய
னக்கோடுகண்ணேடுரியென்பணிந்தானே
யிக்காய்மழுமுதலாம்வான்படையோடென்றனையுந்
தக்கோர்புகழ்கணையாக்கொண்டாய்சரண்போற்றி. ககூ

மெய்யடியார்சாத்தும்விரைமலர்போலன்பிலாப்
பொய்யடியேனான்விழியுங்கொண்டருளும்பொன்னடியாய்
செய்யானேநந்திகணத்தவர்போற்சேயேனு
மெய்தியருட்கூத்தினியமுழக்கும்பேறளித்தோய். உ0

ஆலமளக்கரெழுமந்நாளடைக்கலமென்
றோலமிடுமெங்கட்குயிரளித்தசீராளா
காலமேகாலங்கடந்தபெருங்கருணைக்
கோலமேயானந்தக்குன்றேயடிபோற்றி. உக

விஷ்ணுவுக்குசிவபெருமான்காட்சிகொடுத்தருளுதல்.

கலிவிருத்தம்.

என்னப்பலபன்னியிரந்தயரும்
பொன்னுக்கிறைமேலருள்பொங்கியெழ
மின்னற்சடையோன்விடைமீதுவரை
யன்னாளொடுகாட்சியளித்தனனால். உஉ

கண்டானிருகண்களிகூரமகிழ்
கொண்டான்வறியோன்கொழிதெள்ளமுத
முண்டானெனவோடினனாடினனால்
வண்டாமரைமாதுமணாளனரோ. உங

அதுகண்டுமைபாலருளேக்குதவி
விதுவொன்றுபொலஞ்சடைவிண்ணவனோர்
முதிருங்குறுமூரன்முகத்தலர
மதுசூதனகேட்டிவரந்தருகேம். உச

நார்வானவர்தம்மினுநாரணனீ
பெருவான்வலிபெற்றனையெம்மருளாற்
பொருபோரினுமெம்மினும்வென்றிபுனை
வரமெம்மிடைமுன்பெறுமாதவனே. உரு

எனவங்கருள்செய்தலுமிந்திரைகேள்வன்
மனமொன்றவணங்கிவணங்கியெழுந்
துனதம்புயபாதயுகத்தடியேற்
கனகம்பெறுபத்தியளித்தருளாய். உசா

வரதாமரையோனொடுமற்றுலகும்
வரதாதரல்வேட்டமனத்தினையாமால்
வரதாவரமீதுவழங்குதிநீ
வரதாவெனவோதிவழுத்திடலும். உள

நின்னுசைநிரம்பவரங்களெல்லா
மின்னேகொளநல்கினமேரிழைமா
மன்னுபலகால்வரதாவெனநீ
சொன்னமையன்புதுரும்புறவே. உஅ

வாசத்துளவோயினிநீவரத
ராசப்பெயராற்பொலிவாயெமதான்
பூசித்தனைபுண்டரிகங்களினாற்
பேசிற்பதுமாக்கனெனப்பெறுவாய். உகூ

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

என்றருள்புரிந்தவள்ளலிணையடிவணங்கிமாயோன்
வென்றிவெள்விடையாயின்னும்விண்ணப்பமொன்றுகேட்டி
நின்றிருப்பாதபூசைநித்தலுமடியேனாற்ற
நன்றுமிவ்வத்தியேவற்பணிநயந்தொழுகிற்றன்றே. கூ0

என்னிடையன்புசாலப்பூண்டதாலிதன்பேர்தன்னா
லுன்னெதிரடியேன்வாழுமுயர்வரைக்குடுமியோங்கன்
மன்னுசீருலகினத்திகிரியெனவழங்கல்வேண்டுங்
கன்னலஞ்சிலைவேளாகங்கனல்விழிக்குதவவல்லோய். கூக

புண்ணியதீர்த்தப்பொய்கைப்புனல்படிந்திங்குளார்செய்
புண்ணியமொன்றுகோடிமடங்குறப்புரிந்துமற்றிப்
புண்ணியகோடிவைப்பினுயிர்க்கெலாங்கருணைபூத்துப்
புண்ணியகோடிநாதலிங்கத்திற்பொலிகநாளும். கூஉ

அடியனேன்றண்டாதென்றுநின்னெதிரமர்ந்துபோற்றக்
கடிகெழுகற்பத்தண்டார்க்கடவுளர்முனிவர்யார்க்கு
முடிவறுவரங்கணல்கிமுழுதருள்சுரந்துவாழி
கொடியவெஞ்சீற்றத்துப்பிற்கூற்றுயிர்ப்பருகுந்தாளோய். கூகூ

அண்ணலேயென்றுவேண்டவவற்கவையருளியெங்கோன்
புண்ணியகோடிநாதலிங்கத்துட்புக்கானந்நாட்
கண்ணுதற்பரனைமாயன்காருருக்கொண்டுதாங்கும்
வண்மையாற்றாங்கிமேகவாகனப்பெயர்பூண்டான்றே. கூச

புண்ணியகோடீசப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ருகூரு.

# வலம்புரிவிநாயகப்படலம்

கலிவிருத்தம்.

நலம்புரிபுண்ணியகோடிநாதர்தம்
புலம்புரிபெருமையைப்புகன்றுளேமினி
நிலம்புரிதவத்தினீரத்திநீள்வரை
வலம்புரிவிநாயகன்மாட்சிசெப்புவாம். க

முன்னொருநாளயனரிமுனிவர்வானவர்
கின்னரரோரிடைக்கெழுமித்தங்களுட்
பன்னுதலுற்றனர்படிறர்செய்வினை
யங்கிலேயுறின்றியமுகின்முற்றுமால். உ

அங்கவர்தமக்கிடையுற்றவைபாக்கவு
னங்களுக்கூறுதீர்த்திடினிநல்கவு
மிங்கொருகணவனைப்பெறுதற்கெம்பிரா
பங்கயத்திருவடிபழிச்சிவேண்டுவாம். ௩

விச்சினமகலவிண்ணவர்வேண்டல்.

என்றுளந்துணிந்தனரெய்திமந்தரக்
குன்றமீதெம்பிரான்கோயிலுள்ளுறச்
சென்றனர்தொழுதனர்செவ்விநோக்கிமுன
னின்றனர்மறைகளாற்றுதிநிகழ்த்தினார். ௪

அறுசீராக்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சற்றிதுதிருவுளஞ்செய்துகேட்டருளுதிதலைவனேவெங்
குற்றமேதுறுமனத்தானவக்கொடியவர்தொடங்குசெய்கை
முற்றுறுதாறுபட்டழியவுமெம்மனோர்முயன்றசெய்கை
யிற்றுறுதூறுதீர்ந்தாகவுங்கருணைசெய்யெனவிரந்தார். ௫

விநாயகர்திருவவதாரம்.

அம்மொழிசெவிமடுத்தருள்புரிந்தகிலமுமுய்யுமாறு
மிம்முறைபுரிதுமென்றவர்க்கெலாம்விடையளித்தெழுந்துபோந்து
கொம்மைவெள்விடையினான்சித்திரச்சாலையைக்குறுகியங்கட்
செம்மைசால்சித்திரம்யாவையுநோக்கினன்றேவியோடும். ௬

வானகத்தச்சனுலகிலமுஞ்சித்திரித்தெழுதிவாய்ந்த
வூனமில்சாலையுமொழுதுமாமனுக்களோடுபமனுக்க
ளானவெல்லாமுமைக்கெம்பிரான்காட்டுபோதவற்றுளாதித்
தானமாமிருவனைப்பிரணவமனுச்சனைத்தையல்கண்டாள். ௭

உவகையாற்பற்பல்காலுநோக்கியிங்கிவையெவையுரைத்தியென்னச்
சிவபிரான்றேவியைத்தழீஇயினன்கூறுவான்செலவிகேட்டி
தவலிலிப்பிரணவமனுமதுகாண்மூவரைத்தந்ததாகு
நவிலின்மற்றதுநினதாகுமுச்சத்தியைநல்குமூலம். ௮

மும்மறைமுதலெலாமீன்றிடுமிருமுதுகுரவரான
விம்மனுக்கரியொடும்பிடியெனத்தோன்றலினிவைகளாகி
யம்மநாம்புணர்துமென்றவ்வுருக்கொண்டனராடுகாலைச்
சும்மைநீருலகெலாமுய்யவந்துதித்தனன்றோன்றலன்றே. ௯

கயமுகப்பிள்ளையையிருவருங்காதலாலெடுத்தணைத்து
வயமுறமடித்தலத்திருத்திமெய்க்கலன்பலவணிந்துவாழ்த்த
வியலபுண்டப்புதல்வனுமுவகையாலெழுந்தெதிர்நடித்தல்செய்தா
னயனமாக்களிகொளநோக்கினாளுலகெலாமீன்றநங்கை. ௧0

அங்கையானொத்தினின்றுடலகண்டகங்களிதுளும்பியையன்
பங்கயப்பதந்தொழுதிறைவநீபயந்தசேயிவனையின்னே
யெங்குளகணங்களும்பல்கணநாதருமவருமேத்தத்
துங்கமாமிறைமையீந்தருளெனவேண்டவுஞ்சூலபாணி. ௧௧

கடவுளர்முனிவராயனரிபலகணநாதரெல்லா
முடன்வரத்திருவுளஞ்செய்தழைத்தாதுவான்மடித்தலத்தி
லிடலுடைச்சிறுவனையிருத்திமற்றிங்கவன்வெற்பின்வந்த
மடமயிற்கினியவன்யாம்பெறுமூத்தமாமைந்தனோர்மின். ௧௨

இவனையிவ்வுலகெலாந்தொழுதற்கிறைமையினிருத்துகின்றேங்
குவிமுடிசூட்டுவான்வேண்டுபகரணங்கொணர்மினென்றே
யவரவைகொணர்ந்தபின்மைந்தனைமடங்கலாதனத்தேற்றிச்
சிவபிரான்றிருவபிடேகநீராட்டிமன்மகுடஞ்சேர்த்தான். ௧௩

அரசினுக்குரியநலலணிகளானலங்கரித்தன்புகூரப்
பிரமனைமாயனைத்தேவரைமுனிவரைப்பரமனோக்கி
யுரனுடையுமக்கெலாநாயகனிவனிடையூறறுத்தருங்
கரவிலாநாயகனாகநாம்வைத்தனங்கண்டுகொண்மின். ௧௪

தீயவத்தானவர்க்கூறிழைப்பானிவனென்றுசெப்பும்
தூயவன்வாய்மொழிதலைமிசைக்கொண்டனர்துதித்திறைஞ்சி
மாயவன்முதலியோர்கணேசனைவணங்கினர்கையுறைக
ளேயுமாறுகவினர்விடைகொடுத்ததமதிருக்கைசேர்ந்தார். ௧௫

விநாயகர்திருவிளையாடல்.

கலிவிருத்தம்.

பொருவருந்தடநெடும்புழைக்கையேந்தலு
மிருமுதுகுரவர்தாளிறைஞ்சிமேவுபா
லொருவருங்கணங்களோடுலவியாங்கணுந்
திருவிளையாடலிற்சிந்தைவைத்தனன். ௧௬

ஒளித்துநின்றுடன்பயிலுழைச்சிறார்மிசைத்
தெளித்தெழுபுழைக்கைநீர்த்திவலைதூஉயித்
துளித்ததுமுகிலெனச்சொல்லியுள்ளகங்
களிப்பவானகருமையைக்காட்டிவஞ்சித்தும். ௧௭

புழைக்கையின்மோந்துயிர்ப்பெறிந்துபூமியைக்
குழித்துமுன்னணிந்தனபழமைகூர்ந்தவன்
றொழித்தகல்பாதலத்துரகம்யாவையு
மிழுத்தெடுத்தணியெனப்புயத்திலேற்றியும். ௧௮

ஒன்பதுகோள்களுமுடுக்கணங்களுந்
துன்பறப்பிணித்தசைதுருவசூத்திரம்
வன்பனைக்கரத்தினாற்பறித்துமார்பிடை
யன்பமர்நவமணியாரமாக்கியும். ௧௯

என்னைநீர்கண்டெடுமாதிருப்பதென்னெனப்
பன்னகமெலாவற்றையுங்கனன்றுபற்றிவான்
மன்னிடவீசியங்குடைந்தவானதி
தன்னுடைத்தந்தைபோற்சடிலத்தேந்தியும். ௨0

கலிநிலைத்துறை.

இவ்வகைப்பலசிறுகுறும்பெங்கணுமியற்றிக்
கௌவைநீர்விளையாட்டினிற்காதலனொருநாட்
பௌவம்யாவையுமுழக்கினன்பாற்கடல்புகுந்தான்
கொவ்வைவாயுமைபயந்தருள்குஞ்சரக்குரிசில். ௨௧

புகுந்துவெள்ளநீர்முழுவதும்புழைக்கையின்மடுத்தான்
மிகுந்தபன்மணிநீருறையுயிர்கள்வெம்பணிக்கோன்
முகுந்தனுந்தியன்றிருந்தநான்முகப்பிரான்முகுந்தன்
சகுந்தமன்னவன்றிருவுமப்புழைக்கையுட்சார்ந்தார். ௨௨

வறுங்கடற்பரப்பகட்டினிலெஞ்சுசூர்ப்பங்க
ளுறுங்கரும்பெருஞ்சேற்றிடையாழிப்பனமுன்னு
ணுறுந்துழாயணியாமையைநலிவுறப்பற்றிக்
குறும்படக்கியபிரான்வருதிறங்குறித்தனபோல். ௨௩

மாயமீன்விழிபறித்தவன்முன்வருமிளவன்
மேயவாறுகண்டனவெனத்துடிப்பனசிலமீன்
பாயபூம்புனலரசனம்பனுக்கிடுந்திறைபோற்
சேயபன்மணிவயின்வெறுறுமிமைப்பனசிலவே. ௨௪

ஐயன்வார்செவிக்காற்றினிலலைகண்மிக்கெறிந்து
வெய்யபேரொலிகாட்டுவெற்றவியன்கடல்கண்
மையகன்றதங்கிளைவரைச்சூழ்ந்துமைகாணூஉக்
கையெறிந்தழுதிரங்கிவீழ்ந்தரற்றுவகடுக்கும். ௨௫

இன்னவாறுபாற்கடல்வறந்தழிவுறவிருங்கை
தன்னிலேற்றநீர்மீளவுந்தரைமிசைவிடுத்தா
னன்னைநீருடன்வீழ்ந்தனரயனரிமுதலோர்
துன்னுநீர்படுதுரும்பெனத்திசைதொறுஞ்சிதறி ௨௬

பின்னரோரிடைத்திரண்டுடன்குழீஇயினர்பெரிது
மின்னலுற்றனர்தத்தமுட்பேசினரெளியோ
முன்னைநல்வினைப்பயத்தினாலின்றுமுழுதுலகந்
தன்னில்வந்தவாறுறுபிறப்பெனப்படித்தனரால். ௨௭

விஷ்ணுபாஞ்சசன்னியமிழத்தல்.

மருட்சிதீர்ந்தபின்மாயவனிடக்கையின்வழுவு
முருட்சிசூழ்ந்தவெண்சங்கினைக்காண்கிலனுயங்கி
வெருட்சிகொண்டனன்றேடினன்வியன்றிசைப்புறத்துத்
தெருட்சிகொண்டதும்வாவிப்பதுகேட்டனன்செவியில். ௨௮

ஓசையாலதுபாஞ்சசன்னியமெனவுணர்ந்தவ்
வாசையிற்சிலர்தமைச்செலவிடுத்தனனவர்போய்
மாசிலைங்கரப்பிரான்கனம்வாயிடைக்கொண்ட
வேசறுஞ்சுரிமுகத்தினைக்கண்டுமீண்டுரைத்தார். ௨௯

வறலீர்ம்புனனுக்குப்புடைபெயராவகைமல்குந்
தெறுநீர்நசைவாட்டச்செழுநறுமாமலர்பூத்த
வெறிநீர்நிலையுண்ணப்புகவதன்வீழ்புனல்சியா
யுறவேதனைமிக்குத்துயருடலச்சிலர்கலுழ்வார். ௯௭0

பைந்தாமமலங்கிப்பனிநீர்மென்றுளிதூவி
யைந்திபோசனைகமழுங்குளிர்பந்தர்ப்புடையணுகிச்
செந்தீயெனவவைவெய்துதெறச்சாம்புமுளத்தான்
வெந்தாவெவென்செய்கோவெனவெருவிச்சிலர்மெலிவார். ௯௭௧

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இன்னபன்னரகத்துன்பமெய்துபாதகரைக்கண்ட
மன்னியதவத்தானப்பாற்செல்லுழிமற்றோர்பாங்கர்த்
துன்னியபதகர்பல்லோர்சொல்லருங்கொடுமைசான்ற
வெந்நரகுழப்பக்கண்கள்வெதும்புறநோக்கிமாதோ. ௯௭௨

ஈங்கிவர்யாரையென்னவியமனைவினுதலோடு
மாங்கவனெனக்குமுன்னிங்கரசுசெய்தவர்நாளுள்ள
தீங்கினரிவரையென்றுஞ்செப்புதற்கொண்ணுதென்ன
வோங்கியமுனிவன்காலனுடன்வரவயனையண்மி. ௯௭௩

கடவியன்னவனுமவ்வாறுரைத்துடன்கலந்துபோத
வடலவிர்திகிரிமாலையடுத்தனன்வினவிமாலும்
படர்தரவவர்போற்கூறிப்பாயொளிவிரிக்குங்கோட்டுத்
தடவரைக்கயிலையோங்கல்சார்ந்தனன்றெழுதுபுக்கு. ௯௭௪

மங்கையோர்பாகமாகவாலுளைப்பிறழ்பற்பேழ்வாய்ச்
சிங்கவேற்றணையின்மேலாற்சிவணியதுணர்ப்பூங்கொன்றைத்
தொங்கலார்ப்பாதப்போதுசுருதிகள்புகன்றுபோற்றிப்
பொங்கியகாதனீடக்கடாவலும்புனிதர்நோக்கி. ௯௭௫

அருந்தவத்தலைவகேண்மோவன்னவெந்நரகத்தாழ்வார்
திருந்தியவறங்கணீடுந்தெய்வதக்காஞ்சிவைப்பி
னிருந்துமுன்பாவமீட்டியிறந்தவரவர்கள்செய்த
கருந்துயர்ப்பாவபேதங்கரைதுமென்றருளிச்செய்வார். ௯௭௬

உருகவெந்தொளிறுஞ்செப்புப்பாவையையறுப்புத்தீய
விருகையிற்றழுவியங்கணிடும்பையுளழுந்துகின்றோர்
பெருகியவனப்புநோக்கிப்பிறர்மனைபெட்டுளோரு
மருவியகணவர்த்தப்பிமனவழியொழுகினோரும். ௯௭௭

குருதிகொப்புளித்துப்பாயக்கூரிறுப்பாணிகாய்த்தி
யிருவிழிசெய்யவாயினைமூத்தவங்கினைந்துநிற்பார்
மருள்வளர்விழைவாலேதின்மனையவர்ப்பார்த்துளோரும்
பருவரப்பிறர்ப்பாலுள்ளபழியெடுத்தியம்பினோரும். ௯௭௮

இருப்புநெட்டூசிதன்னுலினைக்கரம்பொதிர்த்துச்செம்பு
நெருப்பிடையுருக்கிவாக்கநெடுந்துயருழக்குந்தீயோர்
கருப்புவிற்கணையேறுண்டகாதலான்முத்தமூர
லருப்பிளங்குவவுக்கொங்கையயன்மனைபரிசித்தோர்கள். ௯௭௯

காலசூத்திரப்பேர்வாய்ந்தகடுநரகுழக்கின்றார்கண்
மாலினாற்குரவனில்லாள்வனமுலைதிளைத்துளோர்கள்
கோலவார்கரத்தைவாளாற்குறைத்தடவுயங்குகின்றா
ரேலவார்குழலாளில்லத்திருப்பவேற்றவரைத்தோய்ந்தோர். ௯௮0

கலைமடுத்துலக்கையோச்சித்துவைப்பவுள்கலங்கிநைவா
ரறிவுமுற்றிருக்குந்தேறலைடித்தறந்திறம்பினோர்க
ளூறுதுயர்க்குருதிச்சேற்றின்முழுகிநெஞ்சுளைதலுற்றார்
நெறிபிழைத்தரியன்மாந்திநெடுங்களிதிளைத்துளோர்கள். ௯௮௧

விடுப்பருங்காளகூடவெந்நரகொறுக்குந்தீயோர்
கடுப்பிறழ்ந்துரைத்துளோர்நஞ்சமிட்டுயிர்மாய்த்தோரும்
கடப்பருவஞ்சநாளுங்கையிகந்திழைத்துளோருங்
கெடுப்பருந்தீயகோள்கள்கிளந்திருநிதிபெற்றோரும். ௯௮௨

கூடசன்மலிப்பேர்வாய்ந்தகொடுநரகுய்த்துத்தூதர்
நீடுமெத்திகைகளோர்ச்சிநெறிதகப்புடைக்கநோவா
ராடமைத்தோளினாரையருந்துணைவரைநல்லாளைப்
பீடறுமனத்தராகிப்பேதுறலுறுத்தினார்கள். ௯௮௩

சுடர்ந்தெரிவடந்தைத்தீயுந்துன்னெனவலறிச்சாம்பி
யிடைந்திடுங்கொடுமைசான்றவிரவுரவத்துத்தோய்ந்தோ
ரடைந்தவர்க்குறுகணுற்றுமாட்டருங்குதலைத்தீஞ்சொ
ணடந்துழல்சங்கைமென்றாணன்மகக்கொலைசெய்தோரும். ௯௮௪

செறியிருணரகினாழ்ந்தசிதடர்கடறுகண்வாய்ந்து
மறையவர்ச்செகுத்துளோர்கண்மாற்பருங்கோணைச்செல்ல
னிறையசிபத்திரப்பேர்நிகழ்நரகழுந்துவார்க்க
ரிறுதிநால்வருணத்தோர்க்குமிழைத்தபுன்புலைமையாளர். ௯௮௫

வாளினாலுடலம்போழ்ந்துவடுவுறப்பொருத்திமீட்டு
மீளவையம்மியிட்டுநெறுநெறுநெறுவென்றென்பு
தூளுறக்குருதிபொங்கிச்சோர்தரவரைக்கப்பட்டோர்
பிளினைமறமீக்கொண்டுபேதுசெய்திட்டநீரார். ௯௮௬

நெருப்பெனவுடற்றுமிச்சினெடுநரகுழந்துநின்றோர்
மருப்புனற்கிணற்றினாற்றின்வாவியினுமிழ்ந்துளோர்கள்
கருப்புநெட்டாலைவாயிற்கரைந்துடலொழுகநின்றோர்
விருப்பொடுசுவைகளாறும்விற்றுழன்மறைவலாளர். ௯௮௭

காற்றலைப்பிணித்துநாற்றிக்கடுங்கனன்மடுப்பப்பொங்கி
யூற்றிருந்தூனீர்பாயவுருகிமெய்வெதும்புகின்றோ
ரேற்றமார்சுருதிவாய்மையிகந்திரும்பொருள்வேட்டெண்ணெய்
கூற்றுறழ்நஞ்சுபஞ்சிவிலையினாற்கொடுத்தபார்ப்பார். ௯௮௮

வெருவருங்கும்பிபாகவெந்நரகுழந்துமாய்வோ
ரொருவருந்தேவரொக்கல்விருந்தினையூட்டாதுண்டோர்
பருவரும்வறியகூவன்மறிந்துகனூக்கப்பட்டோ
ரிருநிலங்கொடுங்கோலோச்சியிறைமைபூண்டாண்டவேந்தர்.

வேதனையுழப்பவாளால்வெகுண்டுவோரகடுகீண்டு
சோதிவெந்தழலிற்காய்த்திச்சுடசுடவிருப்புமுள்ளும்
பேதுறக்கிளைக்கும்வல்வாய்ப்புழுக்களும்பெய்யப்பட்டோ
ரேதிலார்பொருள்கள்வெளவியின்புறுங்கொடியநீரார். ௩௯௦

மாசையங்கமலமென்னவயங்கிவார்குடங்கைதன்னைத்
தூசினுற்பொதிந்துநெய்யிற்றோய்த்தெரிசொளுத்தப்பட்டோர்
காசறுநிதியமெல்லாங்கல்லிமண்புதைத்துப்பேணி
யாசையினமையாராகியையமேற்றுழிதந்தோர்கள். ௩௯௧

ஓதரும்பனிப்புச்சான்றவதோமுகாரகினுற்றோர்
வேதியர்தவத்தின்மூத்தோர்விழுத்தகுதேவர்சூழல்
போதலர்பனிப்பூந்தீர்த்தம்பொருப்பிவைதமக்குநேரே
நீதியினிகழ்ந்துதாள்கணீட்டியதறுகணாளர். ௩௯௨

சீற்றமிக்கரும்பவாங்கிச்செய்யநாவரியப்பட்டோ
ரேற்றவர்க்கொருவனன்பினீவதுவிலக்கினோர்கள்
ளாற்றருஞ்செல்லற்செந்தீயளற்றின்வீழ்ந்தழுங்கினோர்கள்
போற்றுமனைகடோறும்பொங்கெரிகொளுத்தினோர்கள். ௩௯௩

அணரியிற்றொடரிற்பூண்டுமுடக்கினையழுத்தித்தூக்கி
யிணரெரிமடுப்பக்கீழாலிரங்கிமெய்பதையாநின்றோர்
நிணமலிதொழுதிப்புள்ளுநீரில்வாழுயிருங்கொன்று
தணவருங்காதல்கூரநுகர்ந்தருட்டன்மைநீத்தோர். ௩௯௪

இலங்கொளிக்கொடுவாள்பற்றியீர்ந்துதந்தசைகள்வாங்கி
யலங்குசெந்தீயிற்காயுமகலிடைவறுத்துவாரிப்
புலிங்கமும்புகையுநாசியுயிர்ப்பவாய்ப்புகுத்தப்பட்டோர்
விலங்குகள்கொன்றுதின்றுவீணுடல்வீக்கினோர்கள். ௩௯௫

அருந்துயருழப்பநாவுமங்கையுந்துளைத்துக்கோத்த
விரும்தொடரிருப்புக்கட்டியுமிழ்கொளீஇநாற்றப்பட்டோர்
சுரந்தசெல்வத்தராகிவாழுநாட்டுன்னியல்லாந்
திரந்தவர்க்கிலையென்றோருமின்பொருளுதவாதோரும். ௩௯௬

நெடியபதம்படலங்கீழ்ந்திட்டேந்துநெய்த்தோருஞ்செந்தீச்
சுடர்தவழ்ந்தெரியுநெய்யுந்துரிசறவுருகுஞ்செம்புங்
குடியெனவூட்டியோச்சக்குழைகின்றாரிரந்துளோர்க்குக்
கடியநீர்நசையமாற்றக்கமழ்புனலுதவகில்லார். ௩௯௭

மருமலர்க்கமலம்போலும்வாண்முகங்குடைந்துசெப்பி
னுருகியவிதவைவாக்கியொறுக்கும்வன்கிருமியட்டிப்
பருவரலுறத்தப்பட்டுப்பதைபதைத்தழுங்காநின்றோ
ரிருமுதுகுரவர்தம்மைவெகுண்டிடுமிழுதையோர்கள். ௩௯௮

அரவியவிருப்புமுள்ளிட்டழுத்திவெந்தழலிற்காயு
மரவடியிவர்வித்தொல்லைவழங்குதிரைமுட்கோலால்
வெரினெலும்பொடியவொற்றமெலிகின்றார்பெரியோர்முன்னர்ப்
புரிமாவடிகளாதிமேல்கொடுபுகுந்தநீரார். ௩௯௯

எரிதவழ்ந்தெரியுமெண்ணெயிடைமடுத்தெடுத்துப்பின்ன
ரில்படுசிறகர்வல்வாயடல்கெழுபறவைக்கூட்ட
நரிமுதல்பிடுங்குங்கோரநரகின்வாய்ப்படுப்பப்பட்டோர்.
தெரிவிலாவெறியராகிப்பாதகமைந்துஞ்செய்தோர். ௪௦௦

வெள்ளெயிறழுந்தப்பற்றிப்பாந்தளின்விழுங்கப்பட்டோர்
தொள்ளைநெஞ்சுடையராகியெளியரைத்துளக்கங்கண்டோ
ரொள்ளியவுருவமெல்லாமீக்கணமொறுக்கப்பட்டோர்
தெள்ளுநோன்பிடையேவிட்டதிக்குணச்சிதடரம்மா. ௪௦௧

அண்டநீண்முகடுரிஞ்சவெய்தெழுங்கொடுந்தழலடுப்பதைக்கின்றோர்.
கொண்டல்சூழும்பொதும்பரின்மரீஇளைச்சுறைத்துமேல்வியினுய்த்தோர்
மண்டுசீர்மதாலயத்திட்டிகைமாயனுலயத்திட்டோர்
வண்டுபாடும்படப்பையின்மலர்பறித்தணிந்துமாதரைத்தோய்ந்தோர்.

துறகல்மீதிலிட்டாண்குறிகுணில்கொடுதுவைத்துறத்தெறுமூசி
நிறைமுட்டத்தறிசிரம்பிதிர்த்தெழக்குதத்தறையநெஞ்சழிகின்றோர்
பிறையுரிஞ்செயில்புடையுடுத்தோங்குநம்பீடுடைத்திருக்கோயி
லிறைகொண்டுதளிநந்தனவனத்தினுமிரண்டியக்கமுதீத்தோர். ௪௦௩

செக்கின்வாயிலிட்டரைத்தழற்கும்பியிற்றெறக்கவுன்றழுவோர்க
டக்கவாலயந்தீர்த்தநந்தனவனந்தனிமடமெனவோது
மிக்கசீர்வளரிடங்களினடியில்கண்மிசைதலுங்கருங்கூந்தன்
மைக்கண்வாணுதன்மடந்தையரிளமுலைமணத்தலும்புரிந்தோர்கள். ௪௦௪

வார்த்தகாரிருப்பாணிகளூசியின்மடுத்துவன்னியிற்றோய்த்த
கூர்த்தவான்றறிசிரம்புடைத்தெரியுநெய்யொழுக்கலுங்குறைகிற்பார்
சீர்த்தநந்தனவனத்தலர்தேமலர்த்திரள்பறித்தனர்மோந்து
கார்த்தகுஞ்சியின்மிலேச்சியவறிவிலாக்காமுகமனத்தோரே. ௪௦௫

பிரிவருங்கொடுந்தூதர்கைக்கயிற்றினும்பிணிப்புண்டு
முரலும்வண்சிறைத்தும்பிகள்குடையநோய்முதிர்ந்துமூர்ச்சனையுற்றோர்
குரவன்மெய்ப்பணிமயமதருட்பணியடியவர்குலப்பணியாதி
புரியவன்னவைகண்டழுக்கற்றுளம்புகர்படுசிறியோரே. ௪௦௬

ஒழுகிநாவொருகாவதநீளமற்றுதனைவெங்கொலைத்தூதர்
கொழுவணிந்ததிண்கலப்பையாலுழுதுழுதுழக்கியகுருஉப்புண்ணிற்
புழுவுஞ்சோரியுஞ்சீயுமீத்தொகுதியும்பொங்கநொந்தயர்கின்றோர்
விழுமநல்கும்வேதாகமந்தமையிழித்துரைத்தவல்வினையோரே. ௪௦௭

வைத்தவச்சிரவூசநாமுழுவதுந்துறுத்துவாருடல்வேவத்
தொத்தழற்சிகையுருக்கியவுலோகநீர்தோய்த்தெடுத்தடப்பட்டோர்
பத்திவாய்ந்தநம்பாதபூசனைத்தொழில்பரித்தல்செந்தழலோம்பன்
மெய்த்தகாதலினதிதியர்பூசனைவிளைத்தலின்றுணைவுண்டோர். ௪௦௮

ஓடுநீரெனவுருக்கியவங்கமுச்சியில்விடப்பருவந்தோர்
பீடுசான்றநங்கோயிலிற்றுயின்றுதம்பித்தையொன்றனையுக்கோர்
நீடுபூந்தழற்சலாகைகளூசியினேற்றநெஞ்சலமந்தோர்
பாடுசார்ந்தநந்தீர்த்தத்தினழுக்குநீரொழுக்கினைப்படவிழ்த்தோர். ௪௦௯

சுரிகைகொண்டுசெந்நாவினைத்துணித்திடத்துன்பவாரிதியாழ்ந்தோர்
வரியளிக்கணமுரன்றெழுநந்தனவனத்துவாய்ப்புனருழ்த்தோ
ரெரிமடுத்தசெம்புருக்குவாய்பகுந்தெடுத்தெடுத்துவார்த்தடப்பட்டோர்
குரவனில்வயிற்கண்படைகொண்டுதம்பலமுமிழ்ந்தகொடியோர்கள். ௪௧௦

சென்னிகீழுறநட்டொறுத்தலுந்தெருமந்துடற்றுளேதோறு
மன்னிநீள்புழுக்கிளேப்பவென்றசைகொடிப்ருந்துணமறுகுற்றோர்
துன்னுந்தீவினைப்புறமதத்திருந்தெமைத்துவளிலெம்மடியாரை
நன்னர்நீறுகண்மணிகளேநமையுணர்குரவனைப்பழித்தோர்கள். ௪௧௧

வெடித்தழுகேடெறித்தெழவுருகியவெண்ணிணம்வழிந்தோடத்
துடித்துமெய்யெலாநீறவெந்தழற்கொடுந்தொன்னரகிடைத்தோய்ந்தோர்
கெடுத்தவைம்பொறிக்குரவனிட்டிகைசில்கெடுத்தவரடியாரில்
லடுத்துமென்றுகில்கண்மணிகவர்ந்தவரென்னுமப்பழியோரே. ௪௧௨

வேறுவேறுறப்பனைத்தும்வெள்வாளினால்வெருக்கொளவரிந்தந்தக்
கூறுமீளவுமுருவுசெய்தங்கெயிற்குழைக்கமிக்கினேகின்றோர்
மாறுகாஞ்சனம்வலிதினுய்த்தளித்துநம்படப்பையின்வளர்வாழைத்
தாறுபாய்கனிகவர்ந்துயர்வேதியர்தங்களேநுகர்வித்தோர். ௪௧௩

கறைமடுத்திடித்தெடுத்துநெய்த்தோருகக்கையினாற்பிண்டித்து
நிறையின்வங்கமேர்டடைத்துவாய்மூடிவெந்நெருப்பிடக்கொதிக்கின்றோர்
முறைதெரிந்ததங்கடும்பமங்களித்தநீர்முதிர்செழும்பழனத்தைப்
பெறவிழைந்துபல்கான்முயன்றரசராலும்மையும்பேதுற்றோர். ௪௧௪

வார்ந்தவாளரம்பிறழ்பவிற்றடிகுடர்மருங்குநைந்துகப்பூட்டி
யீர்ந்துசெங்களற்கொதிக்குநெய்யிடக்குளித்தெழுந்தெழுந்தழிகின்றோர்
சார்ந்தவேதியர்க்கன்பினாற்பசுத்திரட்டானமுய்த்திடுமேல்வை
யார்ந்ததம்பசுநிரையயிற்சேர்ந்தநம்மானேயுமுடங்கிநோதோர். ௪௧௫

நெடியவச்சிரமதலேயைப்பற்றிநீள்கனற்கொழுந்தடமாய்வோர்
கொடியணிந்தெயின்மருங்குடுத்தோங்குநங்கோயிலினடஞ்செய்யுந்
துடியிடைப்பனைத்தோளியர்தமைநலந்துய்ப்பவிற்செறித்திட்டு
விடுதல்செய்கலாதரசராலும்மையும்வேதனைக்கடலாழ்ந்தோர். ௪௧௬

வாயிலொன்பதுமுருக்கியதமனியம்வாக்கிவன்னியினிட்டுக்
காயும்மைநுதிக்கருவிகடசைநிறுத்திருத்துறக்கனாகின்றோர்
தூயமாழையினரிறப்புரிந்தநந்தூமலர்த்தொடைத்தோளி
னேயுமுப்புரிநூல்கவர்ந்தித்தவர்புனைந்தவரிவர்மாதோ. ௪௧௭

ஓறுக்கும்வெவ்வழனெய்யின்வீழ்த்தழுந்தவாப்புறப்பனைத்தினுங்கோத்திட்
டிறுக்கிநாசிகண்காதினிற்சலாகைகளேற்றநொந்துயிர்ப்பில்லா
ரிறப்பமெய்வருந்தியபொழுதெம்முடைச்சினகரத்தெலுமிச்ச
நிறப்பழஞ்சுடர்விளக்குநெய்கவர்ந்துதோய்த்தொத்திநன்னெறிநீத்தோர்

காதநான்குறக்கண்கனுவளர்ந்துபோய்க்கழுகுநாய்நரிவெளவ
வாதகாதெனவுயங்கியசீத்தையாராலயத்தெமைப்போற்றப்
போதுமேல்வைமெய்வளியெழீஇயொருசுடர்பொன்றவன்னதுகாணு
ரோதுமவ்விளக்கவிந்தமைகண்டுரையாதவரிவர்மன்னே. ௪௧௯

என்றுபின்னுமங்கினைபவர்தமையெலாமிவரிவரெனக்கூறி
மன்றவிங்கிவராளற்றினின்றேறவுமதிக்கினியிர்கள்வல்லே
சென்றுமற்றிவர்தமைக்குறித்தத்திருக்காஞ்சிமாநகர்வைப்பி
னென்றுமன்பினம்பூசனையுஞற்றுமினென்றனருமைபாகர். ௬௨௦

அருளும்வாய்மொழிகேட்டலுமுவகையினிருந்தவன்முதலானோர்
கருணைநாயகன்றிருவடிபணிந்தனர்விடைகொடுகடிதெய்தி
முருகுநாறியகாஞ்சியினேகம்பமுதல்வனைவழிபட்டுப்
பெருகுதீர்த்தமாயொழுகியகம்பையின்பெருமணிக்கரைப்பாங்கர். ௬௨௧

தேவநாதனென்றோங்கியபெயரிஞ்சிவக்குறிநிறீஇப்போற்றுப்
பாவகாரியரனைவரும்பருவருகும்பியின்படர்நோய்தீர்ந்
தோவில்காஞ்சியினுற்பவித்தேகம்பத்தம்பனையுறப்போற்றி
நாவலோர்புகழ்கயிலையிற்சிவகணநாதராய்ப்பயில்வுற்றார். ௬௨௨

மற்றோர்காலையினத்தகுகௌதமமாதவன்கயிலாய
முற்றுநாதரைத்தொழுபவன்மற்றிவர்தரைக்குவானகைகாட்டிப்
பற்றலார்புரம்பொடித்தவகாஞ்சியிற்பயிற்றுதீவினையர்று
முற்றுமோதினைபுண்ணியப்பயனையுமொழிகெனவருள்செய்வார். ௬௨௩

தடுத்தவைம்பொறியுறுவனேகேண்மதிசார்ந்துநீரெமக்கன்பிற்
றொடுத்தபூசனைப்பேற்றினுற்கும்பியிற்றுயருழந்தவர்யாரு
மடுத்துநம்வயினிதோகணநாதராயமன்றனர்காணென்று
மடுத்தகாதலின்மொழிந்துமற்றெத்திறப்பயன்களும்வகுத்திட்டார்.

வேறு.

இன்னபல்பெருமைசான்றவெழில்குலாய்காஞ்சிதன்னை
முன்னொருகற்பத்தும்பருலகில்வாழ்முறைதேர்தச்சன்
கன்னியோர்பாகத்தண்ணல்கருணையினேவப்பெற்றுத்
தன்னுறுதொழின்மைமுற்றத்தனிநகராக்கப்புக்கு. ௬௨௫

வேறு.

கிழக்குவாய்தறனின்மாயாபுரங்கேழ்கிளரும்பொன்னகரை
யிழிக்குந்தெனுதுவாய்தலிடையிராசராசபுரமேல்பாற்
செழிக்கும்வாய்தறனில்வளங்கள்செறிமார்த்தாண்டபுரம்பவநோ
யழிக்கும்வடாதிவாய்தலரிகண்டபுரமும்வகுத்தமைத்து. ௬௨௬

நாலாயிரத்தைத்தலைப்பெயுநாற்பதினுயிரவாய்தல்களியக்கி
நூலாலொழுக்கிக்கவின்கொழிக்குநூறுயிரவீதிகள்போக்கி
மேலாய்விளங்குநாற்சாதிமுதலாங்குடிவெவ்வேறிருயிச்
சாலாவினைதீர்சிவபுரப்பேர்தழங்கநெடுவணகர்செய்தான். ௬௨௭

அங்கணரியேற்றணையின்மலையணங்கோடினிதுவீற்றிருந்து
செங்கணரிநாண்மலர்க்கடவுடேவர்முதலோர்பணிகேட்பத்
திங்கண்மிலைத்தபொலஞ்சடிலத்தேவநாதர்தனிவேந்தாய்ப்
பொங்குகருணையூற்றெடுப்பப்புவனமுழுதும்புரந்திருந்தார். ௬௨௮

உலகமுழுதுந்தலையளிசெய்தோம்பும்பதத்தினயன்செழுந்தாண்
மலர்கள்பணிந்துவேண்டுதலுமல்லன்மிகும்பங்குனிச்சாறு
குலவுநவியுத்திரத்திற்குன்றத்துயிர்த்தபெண்ணமுதை
யலகிலுயிருய்க்ளிதூங்கமன்றல்வினையாற்றினர்வாழ்க்கை AYA ௬௨௯

கலிநிலைத்துறை.

பின்னரொவ்வொருகாலத்துப்பிஞ்ஞகனருளா
லன்னமூர்பவனரிமகவானிவர்தாமு
மின்னலோப்புமக்காஞ்சியையிறைமைபூண்டளித்தார்
ன்னரெண்ணிலர்முறைப்படியாண்டவர்மாதோ. ௪௯0

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முருகவேளைங்கைப்புத்தேண்மொய்கதிரிமயமீன்ற
திருநுதலிவர்களல்லாற்றேங்கமழ்தனிமாமூலத்
தொருவனார்முகிழ்ந்துவைகுமுலப்பருங்காஞ்சிமூதூர்ப்
பெருமையைமுழுதும்யாரேயுரைத்திடப்பெற்றிவல்லார். ௪௯௧

கலிவிருத்தம்.

வாழிநான்மறைவாழியசைவநூல்
வாழிமன்னவர்செங்கோன்மனுநெறி
வாழிநீண்முகில்வையகம்யாவையும்
வாழிவாழிவளநகர்க்காஞ்சியே. ௪௯௨

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அஃறிணையுமுயர்திணையுமெனப்பகுத்தவுயிர்கடொறுமவையேயாகிச்
சிஃறொழிலுஞ்செய்யாதுசெய்துவினைத்திறனருத்திச்சிறியேனெஞ்சக்
கஃறணையுங்கரைத்துருக்கித்தடுத்தாண்டகச்சியேகம்பமேய
பஃறலையபாப்பரசினங்கதத்தான்குஞ்சிதத்தாள்பரசிவாழ்வாம். ௪௯௩

இருபத்தெண்டளிப்படலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௨௧௧0.

---

## இரண்டாங்காண்டம்முற்றியது.

---

ஆகக்காண்டமிரண்டிக்குத் திருவிருத்தம் - ௪௮௬௧.

---

## காஞ்சிப்புராணமுற்றுப்பெற்றது.

---

மெய்கண்டதேவர்திருவடிவாழ்க.

கச்சியப்பமுனிவர்திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

---